10

உ

சிவமயம்.

முருகன் துணை.

மலைசைமா நகர்

# நாதகிரிப் பக்திரச மஞ்சரி

என்னும்

# நவமணித் திரட்டு.

இஃது

மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீன வித்துவான்

மலையடிக்குறிச்சி

அ. பிச்சையா நாவலவரவர்களால்

இயற்றப்பெற்றது



மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப் பெற்றது.

கொல்லம் ஆண்டு 1111 யுவஞு புரட்டாசிமீ

காப்பிரைட்] ௵ 1935 [விலை அணு 8.

உ

சிவமயம்.

முருகன் துணை.

மலைசமா நகர்

## நாதகிரிப் பக்திரச மஞ்சரி

என்னும்

# நவமணித் திரட்டு.

இஃது

மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீன வித்துவான்

மலையடிக்குறிச்சி

அ. பிச்சையா நாவலவரவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப் பெற்றது.

கொல்லம் ஆண்டு 1111 யுவ௵ புரட்டாசி௴

காப்பிரைட்]   ௵ 1935.   [விலை அணா 8.

உ

# பொருளடக்கம்.







# விளம்பரம்.

யான் எழுதிய இக்குறள் வசனத்தையேனும், இதனை வேறு பாஷையில் மொழிபெயர்த்து அம்மொழி பெயர்ப்பையேனும், என் அநுமதியின்றி யாராவது வெளிப்படுத்தினால் அதனால் எனக்கு நேரிடும் சகல நஷ்டங்களும் அவரிடம் வசூலிக்கப்படும் என்பதை இதன் மூலம் எல்லாருக்கும் தெரிவிக்கலாயிற்று.

இங்ஙனம்,

மு. ரா. அருணாசலக்கவிராயர்.

உ

கடவுள் துணை.

# திருக்குறள் வசன

# முகவுரை.



தமிழ் வேதமாகிய திருக்குறளிலுள்ள ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களும், சிறிய,கண்ணாடியானது பெரிய மலை முதலிய பொருள்களைத் தன்னுள் ளடக்கிக் காட்டுதல்போல, உலகத்திலுள்ள எல்லா நூற்பெரும்பொருள்களையும் தம்முள் அடக்கிக் காட்டிக்கொண்டிருத்தலை அறிந்து முற்றக் கற்ற கூரிய மதிநுட்பமுள்ள உரையாசிரியர்கள் பலரும் பதவுரை கருத்துரை விசேடவுரைகளெழுதிவைத்தனர். ஆயினும், அவ்வுரைகளெல்லாம் இலக்கிய இலக்கணவரம்பு கண்டவரே அன்றி ஏனையோர் எளிதி லுணர்ந்து தருமார்த்த காமமோக்ஷம் அடைதற்கு மார்க்கமில்லாம லிருக்கின்றனவென்பது அறிஞர்கள் பலரும் அறிந்தவிஷயமே.

ஆதலால், இந்நூற் பொருளைத் தமிழ்ப்பாஷையை யெழுதப் படிக்கத் தெரிந்த சிறுவரும் பெண்களும் பிறரும் இலேசாகத் தெரிந்து அவற்றின் பயன்களை அடையும் பொருட்டுச் சாதாரண வசன நடையிலெழுதி உலகோபகாரமாக வெளிப்படுத்த வேண்டு மென்று நீண்ட நாளாக நினைத்துக் கொண்டிருந்தேன். என்னைப் போலவே யெண்ணியிருந்த எனது நண்பர்கள் பலரும் இந்த வேலையை விரைந்துசெய்து முடிக்க வேண்டுமென்று பலமுறை யென்னை ஏவுவித்தனர். அவரது ஏவலையும் என்னுடைய நினைப் பையும் மறுக்கமுடியாமல் நூற்கருத்தையும் ஆசிரியர் பரிமேலழகர் உரைக் கருத்தையும் தழுவிக்கொண்டே என் கருத்துக்கு எட்டிய மட்டும் எளிய வசன நடையிலெழுதி முடித்தேன். இதை எழுதி வரும்போது மதுரைக் கீழ ஆவணிமூலவீதியில் வைத்தியசாலை வைத்திருக்கும் யாழ்ப்பாணம் மகா-ா-ா-ஸ்ரீ ஆறுமுகம்பிள்ளை யவர்கள் இடையிடையே என்னைச் சந்தித்து வசன நடையை வாசித்

துப் பார்த்து இவ்வசனம் எல்லார்க்கும் மிக்க பிரயோசனமுள்ளதாமென்று மிகவும் ஊக்கமூட்டி வந்தார்கள். அவர்கள் அங்ஙனம் செய்தற்குக் காரணம் தமிழில் வைத்திருக்கும் அபிமானமும் சகல ஜனங்களிடத்தும் வைத்திருக்கும் தண்ணளியுமே ஆம்.

அரிய நூல்களைக் கற்றுக் குற்றமற்றவரிடத்திலும் அறியாமையில்லாதிருக்க முடியாதாகலால் யானெழுதிய இவ்வசனத்தில் எத்தனையோ பிழைகளிருக்குமென்பதில் சந்தேகமில்லை. தன்பிழை தனக்குத் தோன்றுதல் யாவருக்குமில்லை. ஆதலால் இவ்வசன முழுவதும் வாசித்துப் பிழைகளின்னவையென்று கண்டெடுத்துச் சீர்திருத்தஞ்செய்து அறிஞர்களெனக்குக் காட்டுவார்களானால் அவர்களிடத்து நன்றி பாராட்டி அவற்றை இரண்டாம் பதிப்பிலே பதிப்பிக்கும் எண்ணமுடையவனாக இருக்கின்றேன்.

இங்ஙனம்,

மு. ரா. அருணாசலக்கவிராயர்.

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்.

---

| திருவள்ளுவர் பெயர்கள். | திருக்குறட் பெயர்கள். |
|---|---|
| தேவர். | முப்பால். |
| முதற்பாவலர். | பொய்யா மொழி. |
| பொய்யில் புலவர். | திருவள்ளுவப் பயன். |
| மாதாநு பங்கி. | வாயுறை வாழ்த்து. |
| தெய்வப்புலவர். | உத்தர வேதம். |
| செந்நாப்போதார். | தெய்வநூல். |
| பெருநாவலர். | பொருளுரை. |
| நான் முகர். | வள்ளுவனார் வைப்பு. |
| புலவர். | திருவள்ளுவர் தமிழ்மறை. |
| நாயனார். | பொதுமறை. |
| | முதுமொழி. |

# அபிப்பிராயங்கள்.

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதர்
மகாமகோபாத்தியாயர் பிரஹ்மஸ்ரீ
உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியது.

மகாா-ா-ஸ்ரீ மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள் எழுதிய திருக்குறள் வசனம் மிகப் பாராட்டற்பாலது. திருக்குறளையும் அதனுரையையும் ஊன்றிப் படித்துச் சிரமப் படாதபடி இக்காலத்திற்கு ஏற்ப அவற்றைத் தழுவி யாவர்க்கும் பயன்படும்படி எளிய நடையில் இயற்றி வெளிப்படுத்திய இவர்களுடைய உழைப்பு மறக்கற்பாலதன்று. தமிழ்ப்பாஷையில் நல்ல பயிற்சியும் ஊக்கமும் உள்ள இவர்களுடைய ஆராய்ச்சியைப்பற்றி நான் ஏதேனும் எழுதுதல் மிகையென்று எண்ணி இதனை இம்மட்டோடே நிறுத்துகின்றேன்.

இங்ஙனம்
வே. சாமிநாதையன்.

---

சே[illegible]னை பென்ஷன் ஐக்கோர்ட் ஜட்ஜும், பிரஹ்மக்ஞான சபை[illegible]ங்கிராசநாதிபதியுமாகிய ஆனரபில் டாக்டர் சர்.
எஸ். சுப்பிரமணியஐயரவர்கள்
B. L., L. L. D., K. C. I. E. எழுதியது.

தாங்களனுப்பிய திருக்குறள்வசன நடைப்புத்தகம் கிடைத்தது. நாயனருடைய ஒப்பற்ற நீதி அபிப்பிராயங்களை எல்லோரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய விதமாய் தங்களுடைய கிரந்தம் எழுதப்பட்டிருக்கிறது. யாவரும் அதைப் படித்து நன்மையடைவார்களென்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
சுப்பிரமணியன்.
பீச்கவுஸ், மைலாப்பூர்.
6—6—13.

# அபிப்பிராயங்கள்.

இராமநாதபுரம்.

சேதுசம்ஸ்தான வித்துவான். ஸ்ரீமத்

## ரா. இராகவையங்காரவர்கள் எழுதியது.

---

என் அன்புள்ள ஸ்ரீமான் கவிராயரவர்கட்கு மங்களாசீர் வாத பூர்வக விஞ்ஞாபனம். உபயத்ர க்ஷேமோபரி.

தாங்களெழுதிய திருக்குறள் வசனத்தைச் சிற்சில இடங்களிற்படித்துப்பார்த்தேன். பரிமேலழகர் உரைநடையையே பெரும்பாலும் தழுவிச் செல்வது கண்டு மகிழ்கூர்ந்தேன். அரிய பெரிய நீதிநூற் கருத்தைச் சிறிது கற்றோரும் எளிதிலுணருமாறு புரிந்தது தமிழ் மக்களாற் பாராட்டுந் தகைத்தேன்று நம்புகின்றேன். ஆங்கிலக் கல்விச் சாலைகளில் தமிழ் பயிலும் மாணாக்கருக்கு இவ் வசன நூல் பெரும்பயன் விளைக்குமென் றெண்ணுகின்றேன்.

இங்ஙனம் தங்களன்புள்ள,

ரா. இராகவையங்கார்.

சேதுஸம்ஸ்தான வித்துவான்.

---

தமிழகராதிக் கமிட்டிப் பண்டிதர் ஸ்ரீ

## மு. இராகவையங்காரவர்கள் எழுதியது.

---

தமிழ்ப்பாஷையின் அருமை பெருமைகளை நம்நாடுமட்டுமன்றி அந்நிய நாடுகளும் அறிந்து பாராட்டுதற்குரிய தமிழ்ப் பெருநூலாகச்சிறந்து விளங்குவது தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் அருளிச்செய்த திருக்குறள் என்பது பலரு மறிவர். முற்காலத்தே நாகரீகச் சிறப்பு வாய்ந்திருந்த தேசங்களில் தமிழ்நாடும் ஒன்றென்பதையும், பழைய தமிழ்மக்களது மனோபாவங்களின் மாட்சி இத்தகையதென்பதையும் விளக்குதற்கு இத்திருக்குறளினுஞ் சிறந்த கருவி தமிழில் வேறில்லை யென்னலாம். இந்நூலுக்கு ஒருரையன்றி ஒன்பதுரை முன்னோரால் செய்யப்பட்டிருந்தன என்பதொன்றே இதனருமை பெருமைகளை நன்கு விளக்கவல்லது.

உ

சிவமயம்.

# முகவுரை.

நாதகிரிப் பக்திரசமஞ்சரி யென்னும் பெரிய ஓதரிய கவிச்சுவை நிரம்பிய இந் நூல் பாண்டி நாட்டிலே பல்வளஞ் சிறந்து விளங்கிய கண்ணிய மிக்க புண்ணியபதிகளிலொன்றாகிய மலைசைமாநகரில் தூய்மையிற் சிறந்த சுத்த சைவ வேளாளர் மரபில் அண்மையிற்றோன்றி நிலவிய திருவாளர் சிவ. அருணாசலம் பிள்ளையவர்கள் தவப்பயனாக அவர்கள் ஜேஷ்ட குமாரராய் அவதரித்த திரு. அ. பிச்சையா நாவலவரவர்களால் இயற்றப்பெற்றதாகும்.

தெய்வத் திருவருள்பெற்றுச் சைவசமயத்தை உலகில் நிலைநிறுத்திய பெரியார்களில் ஒருவராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளது சரித்திரத்துடன் இப்பெரியாரது சரித்திரத்தையும் ஒப்புநோக்கலாமென்னும்படி இவரது பக்தி முதிர்ச்சியையும் சுத்த சைவ பூர்வ புண்ணியத் தொடர்பையுங் கருதி ஸ்ரீ முருகப்பிரானே இவர் கனவிற்றோன்றி முன்னின்று காட்சி கொடுத்தருளி அன்பனே வருகவென ஆட்கொண்டருள்புரிந்துளாரெனில் இப் பெரியாரது கவிப்பெருமையையும் அக்கவிகளுள் கருதக்கிடக்கும் ஆழிய பொருட்பெருமையையும் இத்தகையவென விரித்துக்கூற எத்தகைய வல்லுநராயினும் எங்ஙனங் கூடுமென்பது ஒரு தலை.

எனினும் இப்பெரியாரது உள்ளமாகிய ஊற்றினிடத்து ஊறி ஊறி வெள்ளமாகிய அன்பின் நீர்ப்பெருக்கே அது பொங்கியெழுந்து பள்ளமாகிய அருவிகளிற் பாய்ந்து வந்து பல ஆறுகளாகப் பிரிந்து ஓடி முடிவிலொரு பக்திரசக் கடலாகப் பரிணமித்து இங்ஙனம் பக்திரசமஞ்சரி யெனப் பெயர்கொண்டதெனவும் பகரலாம்.

முருகன் திருவருளால் உருகியுருகி உள்ளம் பரவச முற்றுப் பாடியருளிய இப் பிரபந்தத்திற்குப் பின்னரே இப்பெரியார் பாண்டிப் பஞ்ச பூத க்ஷேத்திரங்களி லொன்றான அப்பு தலமாகிய தாருகாபுரம் ஸ்ரீ மத்திசக்கடவுள் மான்மியத்தை நூ

புராணமாக வியற்றிச் சூதவனத் திருப்புகழும் நாதகிரித் திருப்புகழும் பாடிச்சேர்த்துப் பல சிவநேயச்செல்வர்களின் பொருளுதவி பெற்றுப் பெரிதின் முயன்று அரிதின் வெளிப்படுத்தியுள்ளார்.

பொதுவாகப் பலதிறச் சுவைகளுஞ் சிறப்பாகப் பக்திச்சுவையும் இயற்கையினமைந்து ஓதுவோரையும் கேட்போரையும் அன்புக்கடலில் இன்புறத்திளைப்பிக்கும் பேராற்றல் வாய்ந்தது அப்புராணமென்பது யாவரும் பாராட்டப் பாலதேயாம். அவையனைத்தும் எமது அனுபவமே.

இவருடைய அன்பு, அருள், அடக்கம், ஒழுக்கம், வாய்மை, சிவபக்தி, சிவனடியார்பக்தி முதலிய பல நற்குண நற்செய்கைகளையும் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் முதலிய கவி நயங்களையும் அறிந்த துவாதசாந்தத் தலமாகிய மதுரை ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சாமிநாத தேசிக மகா சன்னிதானமே இவர்களுக்கு வேண்டும் ஆதரவளித்து இவர்களைத் தமது ஆதீன வித்துவானாக அமர்த்தி நாவலவரென்ற பெயரும் அருளி இந்நூலை அச்சிடுவதற்கான உதவியும் புரிந்தருளினார்களென்றால் அத்தகைய ஒருவரிடமிருந்து பிறக்கும் பக்திச்சுவை நனி சொட்டிக்கொண்டிருக்கும் காவியமும் கவிநலனும், எத்தகையவாய் இருக்குமென்பது யாவரும் ஆய்ந்துணரப் பாலதாகும்.

அக்கால மன்ன இக்காலத்தும் செந்தமிழ்ப் புலமையும் திருவருட் புலமையும் ஒருங்கே அமைந்து இம்மையிற் புகழ் நிறுவிய இப்பெரியார் பரம கருணாநிதிச் செல்வராய்ப் பல்லாண்டு நல்வாழ்வு பெற்றுய்யுமாறு எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேமாக.

இங்ஙனம்,

நா. கிருஷ்ணசாமி நாயுடு,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்வான், மதுரை.



உ

# சாற்றுக்கவிகள்.

## ஆட்கொண்டார் திருவருட் தோத்திரப் பதிகம்.

ஸ்ரீமத் முருகதாச சுவாமிகள் மாணாக்கர்களிலொருவருந்
தலைவன்கோட்டை சமஸ்தான வித்வானுமான கோட்டையூர்

**தி. கந்தசாமிப் புலவரவர்கள்.**

தோட்கொண்டா மம்புனைந்த சானவள்ளி நாயகியைத் துணைவி யாயக்
நாட்கொண்டா னுடலனு பூதிமைக்கு நித்தவெள்ளை நதிய பூதித்
தூட்கொண்டா கம்புனையு நேயதுக்கன் பிச்சையாச் சுகுண னன்பால்
ஆட்கொண்டார் திருவருட்ப திகமுத[illegible]னவரைத்தின் னருள்பெற் றனே.

---

## நாதகிரி மான்மியம்.

**புளியங்குடி, மூ. முத்துக்குமாருப் புலவரவர்கள்.**

புத்திரசம் பத்னுடன்வாழ் பிச்சையநா வலசுகுண பூமான் நாவாற்
சித்திரசந் திரனனைய வெண்சோதிப் பிரபையெங்குந் திகழும் வெள்ளை
நத்திரச மலர்த்தடஞ்சூழ் நாதகிரி மான்மியமிந் நாளி னன்பாற்
பத்திரசத் துடன்சொன்ன கவிப்பெருமை யுணர்தலுக்கும் பகரற் பாற்றே.

---

## நெஞ்சறி விளக்கம்.

சிவகிரிஜமீன் கஸ்பா சமஸ்தான வித்துவான்

**அ. மகாலிங்கக்கவிராயரவர்கள்.**

குளக்கண்ட னற்கழைவி லோற்செகுத்தோன் மலைசககர் குடிகொள்வோன்
குளக்கண்ட மிலைத்தபரன் மாதேவன் மீதன்ப டூர்த்து கேட்போர்க் [மெய்க்
குளக்கண்டஞ் செயமயறீர்க் திடத்திகழ்நெஞ் சறிவிளக்க முறைமே லோர்க்குங்
குளக்கண்ட மெனப்புகன்றான் பிச்சையப்ப மாலிதனேர் கூறற் பாற்றே.

---

## மரகத வல்லியம்மை பதிகம்.

**கோட்டையூர், தி. கந்தசாமிப் புலவரவர்கள்.**

திரகத வல்லி காந்தன் சிலையடி யுண்டோன் கிள்ளைத்
துரகத வல்லி பன்மெய் தூள்பட விழித்தோன் மேவு
மரகத வல்லி பாடல் வழுத்தினன் மலைசைப் பானற்
பிரகத வல்லி யந்தார்ப் பிச்சையாப் பாவ லோனே.

---

நாதகிரி வேட்பதிகம்.

### கோட்டையூர், இ. கந்தசாமிப் புலவரவர்கள்.

எவ்வேலை யும்பணிவோர்க் கின்னருள்செய் வோன்மலைசைச்
செவ்வேண்மீ திற்பதிகஞ் செப்பினான்—குவ்வேழு
முண்டோ னருளமுத மொவ்வாதெ னக்குவளை
வண்டோளன் பிச்சையபூ மான்.

---

மலைசைச் சடாக்ஷரன் மாலை.

சிவகிரிஜமீன் கஸ்ப்பா

### அ. மகாலிங்கக் கவிராயரவர்கள்.

நகமாலை யம்புலிவேய் சிவனேச பிச்சையநன் னாமன் சொற்றான்
மிகமாலை யம்புதா மகளிர்மப லாணையா மெய்யர் செய்ய
அகமாலை யம்புனிதன் மலைசைச்ச டாக்ஷரன்மீ தன்பு வாய்த்து
முகமாலை யம்புலவர் செவியமுத மெனவிதன்சீர் மொழிதற் பாற்றே.

---

திருச்செந்தில் வெண்பா வந்தாதி.

### கோட்டையூர், இ. க்ந்தசாமிப் புலவரவர்கள்.

கந்தரங்கந் தார்தொறுமு லாவுசந்த வெற்புடையார் கதிர்வேற் செங்கைக்
கந்தரங்கத் தாரிகர்நா வாணிகொழு நன்றேஜி கனார் கருத்து
சந்தரங்கந் தாணியின்முக் கியமெனவா ழிமருகர் கரைநா ளைத்துக்
கந்தரங்கந் தாசமெறி யத்தெளிந்தார்த் தெழுஞ்செந்தூர்க் கண்வா ழெம்மான்.
சேயிணைத்தாள் கட்கணியாய் மலைசைநகர்ப் பிச்சையாத் திகழ்நா வல்லோன்
ஆயினர்த்தே னெனதுவன்ற வெண்பாவந் தாதிதனைச் சொல்லிற் கேட்கில்
வாயினிக்கு மனமினிக்குஞ் செவியினிக்கும் பிறவியையும் வாராது மாற்றும்
ஆயினித்த நாற்குவமை யாதேனு மியாரேனு மறைதற் பாற்றே. (2)

---

கண்ணப்ப நாயனார் சரித்திர நொண்டிச்சிந்து.

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

### நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள்.

கண்ணப்ப னார்சரிதை காசினியிற் கற்றோர்கள் கருதிப் போற்ற
விண்ணப்ப னார்சுவையில் நற்சிந்திற் றேன்சிந்தி விரவச் சொற்றான்
வண்ணப்ப னார்மலைசைப் பிச்சையா நாவலவன் வானோ ரேத்தி
எண்ணப்ப னான்ப ரெவரேனு மவான்புக் கேவ லோனே.

---

# பொருளடக்கம்.







உ

சிவமயம்.

முருகன் றுணை.

# நாதகிரிப் பக்திரச மஞ்சரி என்னும்

# நவமணித் திரட்டு.

### விநாயகர் காப்பு.

பூதலத்தி னெவர்களுமா தவர்களும்வா னவரும்வந்து புகழ்ந்து போற்று
நாதகிரிக் கடவுண்மிசை பத்திரச மஞ்சரியா னன்னூல் சொல்ல
வேதமுடி வாயதனுட் பொருளாய்மற் றெங்கணுமாய் விளங்கிநிற்கும்
போதவடி வானருள்மெய் முதன்மகவாங் கடக்களிற்றைப் போற்றுவாமால்.

### பாயிரம்.

### சிவபெருமான்.

பனிவரையி னிறைதவத்தால் வருகொடியா முமைதவத்தின் பரிசுகாண்பான்
தனிமறையோ னெனவேபோர் தவளகத்தி லுறுமன்பின் றலைமை தேர்ந்து
கனிவுவந்து விடைமிசைமான் மழுவுமவள் காண்டிடநற் காட்சி நல்கி
யினியமணம் புரிந்தருளுஞ் சிவபெருமா னிணைமலர்த்தா ளிறைஞ்சுவாமே. (1)

### உமாதேவியார்.

நதியணிசடிலத் திறையிடம்பிரியா நங்கைமுப்புவனமெஞ் ஞான்றும்
ஆதிபுரிமுதல்வி யகட விருண்மைத் தொண்டர்தமகத்துறை தாயாள்
விதிதலை குறுங்கக் குட்டிய வேற்கை வீரனைப் பயந்தருள் விமலை
மதிமுகத் தெந்தா யுமையவ ளுபய மலர்ப்பதந் துதித்துய்கு வாமால். (2)

### பரம்பொருள்.

பூதலத்தெவ் வுயிர்தனினும் போதவடி வாய்நிறைந்து புரியுந் தன்ம
பேதமறிந் தவ்வழிபோ கங்களளித் தவையறிவோர் பெறும்பே றாகி
வேதமுடி மீதிலங்கி யதுவுமறி யாதகில வித்தாய் நிற்கும்
நாதகிரா மயநிமல பெருவெளியை மனவெளியி னுட்டி யுய்வாம். (3)

### பராசத்தி.

எத்தொழிலும் புலன்மிசையுதிப்பதற்குக்காரணமா யென்றுந்தானாய்
அத்துவிதமுடிவாய்மெய்ச்சித்துருவாய்த் தமையலதொன்றல்லவாகித்
தத்துவமா மண்டபிண்ட சராசரங்க ளத்தனைக்குந் தாயு மாகிச்
சுத்தபரவெளியகத்துத் துலங்குபராசத்திபதந் துதித்தல்செய்வாம். (4)

## வெள்ளியம்பலவாணர்.

புள்ளி யிசைக்கும் பொழில்வளக் கூடலான்
வள்ளி யோனெம் வழுதிகொள் வன்புக்காத்
தெள்ளி தாகத் திருப்பதம் மாறியே
வெள்ளி மன்றிற்கூத் தாடியை வேண்டுவோம். (5)

## முருகக்கடவுள்.

திருமுகமூ விரண்டிலகு திறம்போற்றி தந்தையெனுந் தெய்வந் தேறக்
குருமுகமா யொருமொழியின் குணமுரைத்த பராபரமெய்க் கோலம் போற்றி
தருமகவான் றருகொடிநற் குறக்கொடிருக் குடக்கொடிசேர் தழைவு போற்றி
ஒருமுகமாயபிலேந்திமயின்மீதெ னுளத்தமர்ந்தவுண்மைபோற்றி. (6)

## ஸ்ரீமந் நாராயணர்.

பேராருங் கீர்த்திப் பிரபலமெய்க் கொற்றவனும்
பாராளு மாவலியைப் பார்த்தடிமண் கேட்டளிக்கச்
சீரார்தம் மோரடிக்குட் செகமனைத்துஞ் சேர்த்தளந்த
நாராய ணக்கட வுணன்மலர்த்தாள் போற்றுவாம். (7)

## இலட்சுமி, சரஸ்வதி.

புள்ளேறு டையகொடிப் பூமன்மார் பத்துறையும்
வள்ளேறு மெய்யணங்கின் மாமலரின் றாளிணையுங்
கள்ளேறு வெண்கமலக் கன்னிகைபொற் றாளுமெம
துள்ளே றமன்பா லுவந்துபணிந் தோதுவாம். (8)

## திருநந்தி தேவர்.

அந்தி வண்ண னடிதொழ மாலயன்
இந்தி ராதிய ரெய்தினு மேதடுத்
தெந்தை நோக்க மிசையினுள் ளுய்த்திடு
நந்தி தேவையெந் நாவகத் தேத்துவாம். (9)

## திருஞானசம்பந்தர்.

மங்கையருக் கரசியருங் குலச்சிறையா மமைச்சுமன்பால் வரைந்து விட்ட
கொங்கவிழு முடங்கலறிந் திருமுடிப்பேங் கடிதிலெனக் கூடல் போந்தே
அங்கணிறை வெஞ்சுரந்தீர்த் தமணர்களை யறக்களைந்தின் னருணீர்பாய்ச்சித்
துங்கமிகுஞ் சைவபயி ரோங்கிடச்செய் சம்பந்தர் இணைத்தாள்போற்றி. (10)

## சுந்தரமூர்த்திகள், வாதவூரடிகள்.

மறைநகரொரு வியம்பினமுன் காணுமெம் பெருமானை மலர்த்தா ளேனவக்
கறையிரவிற் பாவைமனைக் கனுப்பியசுந் தரன்றாளுங் கருது ஞான
மறைமுழுதுந் தனிமுதல்வன் பெருந்துறையிற் குருந்திலிருந் துணர்த்தப்பெற்ற
இறைவர்திரு வாதவூ ரடிகள்தம தடிகளையு மேத்தி வாழ்வாம். (11)

## திருநாவுக்கரசு, தண்டியடிகள்.

முற்று மன்பை முழுமுதற் காக்கிய
பற்றி னாவுக் கரசைப் பணிந்துநற்
பெற்ற தாதை பிறங்கு பதந்தடிந்
தற்ற மெய்யரை யும்புகழ்ந் தோதுவாம். (12)

## நூலியற்றக் காரணம்.

இத்தலத் துறையுங்குருபரமுநாதனெம்மையாட்கொள்ளுவான்கருதிச்
சித்தமன்புடனேகனவினின்மயின்மேற் றிகழ்ந்தெமக்கினியநூல்செப்பென்
றத்தா வளிக்கச் சிறியனேன் பணிந்தே யுபயமா மலர்ப்பதஞ் சிரமேல்
வைத்தவனருளாற் றமிழினூல்கள் வழுத்தினேன் கதிபெறமாதோ. (13)

## அவையடக்கம்.

வண்டமிழா யிந்நூலை யறிஞர் முன்னே
வழுத்திடயா னுணிந்ததையெவ் வாறென் றுரையிற்
புண்டரீக மென்மலருக் கிணைய தாகப்
போதலர்த்தி யாம்பனின்ற புன்மை போலும்
அண்டர்தச்ச னனிநகார டரங்கு செய்தே
யதிற்சேற்று வழுதுகொணர்ந் தளித்தற் கொப்பாய்
மண்டலத்தின் மதலைகள்சிற் றில்ல மீட்டி
மணற்சோறுண் டகமகிழும் வகையு மாகும் (14)

நிறைமதிசே தகைமலர்பூந் தார்சிறகேசெய்மழலைமொழி நிறுத்தொவ்வொன்றிற்
குறையுளதே யெனினுமதன் குணநாடி மகிழ்ந்தெடுத்துக் கொள்வதேபோற்
கறைதவிர்நன் னூற்கடலைக் கடந்திடுபே ரறிஞர்களியான் கழறி னூலை
முறையுடனொப்புவர்களல்லான்முனியாரென்றேதுணிந்துமொழிந்தேனம்மா

( பாயிரம் முற்றுப்பெற்றது. )

# 2. ஆட்கொண்டார் திருவருட் தோத்திரப் பதிகம்.

விநாயகர் காப்பு.

வெண்பா.

சீராரு முண்மைத் திருவருளை யேதுதிக்கப்
பேராரு நற்பதிகம் பேசுவாங்—காராக
விஞ்ச மதஞ்சொரியும் வேழமுகத் தெந்தையிரு
செஞ்சரணொன் சிந்தையுள்வைத் தே.

நூல். அறுசீரடி.

மங்கள வுலகி லுற்ற மனுடவிப் பிறவிக் கேற்பப்
புங்கமா மறிவோ டின்றுள் போற்றுமெஞ் ஞானந் தேற்றி
யிங்கருள் புரிந்தாட் கொள்வா யென்றுநா ளுநேமத் துங்
துங்கமெய்த் திடக்கத் தாண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம். (1)

முற்பவச் செயலான் மெய்ச்சொன் முழுவது மறியா நாயேற்
குற்பனத் தமிழா ராயு முணர்ச்சிதந் துடையோன் செய்த
அற்புத விளையாட் டான வறுபத்து நாலுங் கற்குஞ்
சொற்பொரு டெளிவித் தாண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம்.()

நேயவர் நூலைக் கல்வி நிபுணரா னிகழ்த்தும் பாவை
ஆயமெய் யறிவு தந்த வழியொடுஞ் சுயமாய்ப் பாடக்
கேயநற் கருணை தந்தாள் கௌமன முருகிப் பற்றுந்
தூயவன் பூட்டி யாண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம். (3)

அற்றைநா ளிரவி லேழை யதுவரை கண்டற் கில்லாப்
பெற்றிசேர் மஞ்ஞை யாகிப் பிறங்கெழிற் சிறைவிரித்து
வெற்றியார் நடனங் காட்டி விரைந்தன்பா லுறுநாட் பாக்கள்
சொற்றிட வருடந் தாண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம். (4)

செந்தமிழ்ப் பதிக மாலை செப்பிநல் லாறெ ழுந்தைச்
சந்ததஞ் சிந்தித் துய்யுந் தாந்தந்து தருணந் தோறும்
வந்தருள் புரிந்து பின்னர் வருங்குறி தெரிவித் தென்றுஞ்
சொந்தமாப் புரந்தாட் கொண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம் (5)

நிகழ்பெறு நாளி லன்பாம் நீலமா மயிலாய்த் தோன்றித்
திகழ்செந்திற் கென்னை யீர்த்தின் சேவடிக் கணியுந் திவ்ய
புகழ்வெண்பா வாலந் தாதி புகன்றிடக் கருணை தந்து
துகழறுத் தென்னையாட் கொண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம்.(6)

மன்னுபண் பொழிலா மென்னும் வளாக நுற்ற காலை
மின்னுகற் கடியோர் பெண்ணு விரைத்தனு கிடநோக் குங்காற்
பொன்னுருக் கந்த சாமிப் புலவனுக் தடுத்தாட் கொண்ட
துன்னுநற் கருணை மெய்மைச் சோதிதாள் துதித்தல் செய்வாம். (7)

புண்டர நுதலுங் காவிப் போர்வையு முருவல் பூப்பும்
வண்டமிழ் மணக்கும் பன்னூல் வழுத்துசெம் பவள வாயுங்
கொண்டடி யேன்முன் வந்துன் குறையெலாந் தவிர்த்தோ முய்வாய்
தொண்டனே மெய்யென் றண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம்.

மற்றுமோர் தினத்தி ராவில் வந்துநல் லாறெ ழுத்தின்
பற்றுறு மனத்தோ யத்தைப் பகரெனப் பகரக் கேட்டு
சற்றுமா முருவல் பூத்தே தனித்ததன் கருத்தை யெல்லாஞ்
சொற்றியஞ் சேலென் றண்ட சோதிதாள் துதித்தல் செய்வாம். (9)

மன்னுமூ வடிய ராக வந்தென தகத்தி லன்னங்
கன்னலி னமுதா யுண்டு களிப்புடன் பரிக லத்தில்
இன்னதே பொசியென் றெற்கு யிரண்டுண்டை யூட்டி யாண்ட
துன்னரும் பரமா னந்தச் சோதிதாள் துதித்தல் செய்வாம். (10)

நன்மையாந் துரியா தீத நடுவுடை நட்பே வாழி
தன்மைசேர் மன்னின் ஞாதி தானெனும் நிறைவே வாழி
பன்மையா ரணங்க டேறுப் பாரபரம் பொருளே வாழி
தொன்மைசா லறவோர் தேறுஞ் சோதியே வாழி வாழி. (11)

( ஆட்கொண்டார் திருவருட் தோத்திரப் பதிகம் முற்றுப்பெற்றது. )

# 3. நாதகிரி மான்மியம்.

## விநாயகர் காப்பு.

### எழுசீரடி விருத்தம்.

பூமேவு செந்தமிழ்த் தென்பாண்டி நாட்டினுட் புத்திடங் கொண்ட பெம்மான்
காமேவிவளரும்வா ரானைசையம்பதியின்மேற்காக வொருகாதவழியுட்
கோமேவு செயசேர சோழபாண் டியர்பிணைக் குத்தவிர்த் தருள்பரமன் வாழ்
மாமேவு மலைசையம் பதிநாத கிரிவளம் வழுத்தவொரு கொம்பர் துணையே.

## நூல்.

பூதரங்கட்கெலாமுதன்மைபெற்றிரவிமதிபோக்குசூழ்தருமேருவைக்
காதலொடுசிலையாய் வளைத்தருள்திறற்பெருங் கருணைமத்திச்சுரா தன்
மாதவனவிடையில்வலம் வருதலாற்சேகண்டிவளைநாதநிதமுமெழலால்
ஆதரவ தானகா ரணநாம நாதகிரி யதிமகிமை யான கிரியே. (1)

தந்தமக் கரியதவ மீடேற முயலத் தகுந்தலமி தெனவு மிக்க
சொந்தமென வுஞ்சதா நாதாக்க ளன்பினொடு சுகவாச தலம தாலும்
விந்தையவர் சங்குசே கண்டிபல வாத்தியம் விளங்கிட முழக்க லாலும்
அந்தமிகு காரணப் பெயர்கொண்ட நாதகிரி யதிமகிமை யான கிரியே. (2)

கோதில்விடை யூர்தலாற் பஞ்சான னத்துடன் குலவுசங் கரிமே வலான்
மூதுவண மேறலாற் கூர்திகிரி யஞ்சங்க மோதுசெங் கமலை யுறலால்
ஓதிமஞ்சார்தலானன்முகம்விளங்கலாலொப்பில்கலைமான்மருவலால்
ஆதியரியயனென விளங்குமுயர்நாதகிரியதிமகிமையானகிரியே. (3)

நெடியகீழ் பாலினல் லாண்பிள்ளைப் பெற்றதாய் நேயசுனை முனிவர் குகைகள்
சடிலமாதேவன்மா கதவல்லிதென்பாற் சயக்குமரன் மேல்பாலிலே
வடநிழலில்வடமேற்கி லையனார்வடபாலின் மகிழ்முப்பு ராரியம்மன்
அடியவர் குழாம்பரவ வாழ்தலா னாதகிரி யதிமகிமை யான கிரியே ()

நன்னலத் தருசூத வனநாத ரகிலாண்ட நங்கையுட னிடப ரவியில்
வன்னமிகு பூசமுத லன்னமான் றேனுகரி மாமேரு சிவிகை யூர்ந்து
பன்னரும் விசாகநா ளிரதமிசை யுலகுளோர் பாவியருள் பெறவ லஞ்சூழ்
அன்னதிருநாட்பொலிவு முள்ளதானாதகிரி யதிமகிமையானகிரியே (5)

திருவிலெனுடுகல்விமக் கட்பேறுமற்றுமுள செல்வங்களியாவும்வேண்டி
ஒருமைமன தொடுகோவி யுடைமுதற் சிவலின்ன முரிமையி னணிந்து சாரும்
பெருகுபுகழ்காவடிகள் கொண்டாடுமன்பரைப் பிரியம்லைவத்தாண்டுமுருகன்
அருள்மலியும் விளையாடல் புரிவதா ஞதகிரி யதிமகிமை யானகிரியே

படிமீது சரிகையொடு கிரிகையிலுமன்புமிகு பற்றுற்றநற்றவத்தோர்
கோடிதானவறுமையர்கள்பிணியாளர்சிவநேயர்குறையங்கிரிவலோர்க்கும்
மிடிதீர வன்னங்கொ டுத்தவரு மன்பர்முதன் மேலுளம டங்க டோறும்
அடியார் குழாங்கண்மிக வாழ்தலா ஞதகிரி யதிமகிமை யான கிரியே. (7)

துங்கவுத்தர திசையி னொருசிறியநகர்மேவு தொழுகுலந்தனிலுதித்தோன் [ன்
எங்கணும்புகழ்பெறவேதோத்தமனெனும்பெயரையிலகுவோனூழின்வினையி
தங்கணுறு பெறுநோய் தவிர்க்கவீ சானசனை தனிலடைக் தன்பி னேற்க
அங்கவை யொழித்துவீ டருளலா ஞதகிரி யதிமகிமை யான கிரியே. (8)

சொற்பசுக வாழ்வுபுவி வாழ்வெனத் தேர்ந்தரிய சுகசாத னம்பு ரிந்து
கற்பமுண் டட்டமா சித்துகள் புரிந்திடுங் கவனமெய்ச் சித்தர் கணமூர்
தற்பரா னிலையினுற் றெங்கணும் தானென சகசமெஞ் ஞானி களும்வாழ்
அற்புதக் குகைகள்பல மேவலா ஞதகிரி யதிமகிமை யான கிரியே. (9)

மூழ்வினைவர் கொடியபா வங்களையு நீத்தின்ப முற்றுறச் செய்வ தாய்வின்
வாழ்விபுதருர்தங்க ளமுதின்மிகவினிமையெனு மாண்பதாய்ப்பானிறமதாய்க்
கேழ்மலர்கள்கமழ்வதாய்ப் பொங்குகால்சாய்வதாய்க்கிளரென்றும்வற்றாததா
ஆழ்புனற் சுனைகள்பல வோங்கலா ஞதகிரி யதிமகிமை யான கிரியே. [ய்

பஞ்சமோ கங்களையு மாற்றுயர்பொ னுக்குநற் பச்சிலைகள் வெட்டுண்டு வீழ்
எஞ்சுதப்புகளைப்பொருத்துபச்சிலைகள்புண் ணொண்பலவகள்வல்விடங்கள்
வெஞ்சுரங் குட்டமுத லாம்பிணி தவிர்க்குமிலை வேர்வசிய மாதி செயும்வேர்
அஞ்சுபசி நீக்கிலையு முள்ளதா ஞதகிரி யதிமகிமை யான கிரியே. (11)

கருணைமலி யருணையில் விருச்சிக ரவித்திருக் கார்த்திகை தொரும்பிர காச
வருணமுயர்தீபதெரி சனமுதவல்போல்விணோர் மண்ணுளோர்கண்டுவப்பத்
தெருளுமா சாந்தசுத் திரவார மதிவார தீபதெரி சனமு தவலால்
அருணனிழ லிருண்டி ளைப்பாற நாதகிரி யதிமகிமை யான கிரியே. (12)

மகத்திறை திசைக்கணெழு பரியனெழு முன்னரே வான்கங்கை யாடி நீறு
முகத்தங்க மாதியி லணிந்துபஞ் சாக்கர மொழிந்தினஞ் சவியத்த ராய் [நீக்கி
மிருத்தபிர தட்சணஞ் செயுமன்பர் வல்வினைகண் மெய்ப்பிணிக ளெவ்வயு
அகத்தினி னினைத்தவை கொடுத்தலா ஞதகிரி யதிமகிமை யான கிரியே.

விடயவா சனையற்ற மனமாதி கரணங்கள் மெய்ப்பரிச மாதி யற்று
நெடிதுதலை கீழ்நின்று தரிபோ லிருந்தரு நெறித்தவ முஞற்றி மேலாம்
இடனுடைய நாரதர் பராசரென் னியவணங் சித்திபெற் றுயர்ந்த தலமாம்
அடர்சூத வனமணிச் சூழ்தலா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (14)

புவிபங்கி டக்கும்ப னிடமேரு வோமெனப் போர்தரூஉ வேந்தர் மூன்றுட்
குவிதவிசி போல்வந்த ஞேர்மனம் போற்பங்கு கூறிமகிழ் வித்த தன்றித்
திவியவடி வுடனங்கு லிங்கமா யுறைதற் கெரித்தருள் பிணக்க றுத்தார்
அவிருமப் புத்தலப் பாங்கரா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (15)

பணியுமா ஞுபா ஞுலியற் றூலையம் பக்கமேற் கெற்று திரைநீர்
மணிகொழிக் குஞ்சிறக் குளசெல்வி ளேபழனங்கள் மன்னுநால் வருணமாந்தர்
கணிகையர்தம் வீதிவெண் மாடங்கள் கூடங்கள் கணயோகர் மடமும்வாய்ந்த
அணிமலைசை நகர்மருங் கமைதலா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (16)

கன்னன்மொழி யகிலாண்ட வல்லிபங் காபூத காரணு பரிபூ ரண
இன்னமுத சந்திரதா சங்கரசிரு பாகர வெனத்துதி புரிந்தி ரைஞ்ச
மன்னன்மா ஞுபாய் பாண்டியன் மகிழ்ந்திட மகப்பே றளித்த பரன்வாழ்
அன்னமா வனமருங் கமைதலா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (17)

எடுத்தெதி ரிரைத்தளி யுடற்படியும் வெம்பல் விரிந்தி டெஞ்சிய கங்கைநீர்
மடுத்திலகு பங்கயங் கமழும்மன் மூழ்கியெனு மல்லல்செறி புனல்வாவி பூத்
தொடுத்தடர் மடற்கந்தி தெங்குமாஞ் சோலைவெண் சுதையொளிரு மாலயங்கள்
அடுத்தருகி லணிபெற விளங்கலா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (18)

அணியணி மிகுந்ததலை வன்கோட்டை வேந்தர்தம் மரண்மனைக ளாக்க நீடு
மணியணி விதிக்குவைக ளவதானி யங்கண்மலர் மாதர்வாழ் மாடகூடம் [பேர்
இணியணிசெய் மைந்தர்தமை யோர்தழைத் தோங்கிவளர் செயதாருகாபுரம்
அணிமணி நகர்ப்பாங்க ரமைதலா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (19)

நீதிமறை யோர்கள்சிவ நேயர்கவி வாணர்கொடை நிகழ்பொருட் செல்வரிரச
வாதியுட னெப்பிணியு மாற்றிடிவ வித்தியர்கள் வாணிபதி கோட்டர் யோகர்
போதிலுறைமாதர்வளர் மாடங்கள் பலதளிகள் பொலிவுறத் தென்மலைசையாம்
ஆதிநக ரின்பாங்க ரமைதலா நாதகிரி யதிமகிமை யான கிரியே. (20)

வெண்பா.

நாதகியார் வேணிமத்தி சன்கோயிற் பாங்கருயர்
நாதகிரி மான்மியத்தை நல்லன்பா — லோதியவர்க்
கெல்லாப் பவிசுமுண்டா மின்புகழுண் டாஞ்செனன
மில்லாக் கதியுமுண்டி மே. (21)

( நாதகிரி மான்மியம் முற்றுப்பெற்றது. )

# 4 மகாதேவன் மீது
# நெஞ்சறி விளக்கம்.

## விநாயகர் காப்பு.

### வெண்பா. பின் முடுகு.

மஞ்சணிசேர் சோலை மலைசைமகா தேவன்மிசை
நெஞ்சறிவி ளக்கநூ னேர்ந்துசொல—விஞ்சைதரும்
அஞ்சரவ ணத்துதித்த வத்தனுக்கு முன்னுதித்த
குஞ்சரவ ணத்துமுகக் கோ.

### நூல். எண்சீரடி விருத்தம்.

பண்ணுடையான் வாளரவப் பணியே யுள்ளான்
பரவுதொண்டர் பாலுடையான் பால மங்கைக்
கண்ணுடையான் மான்மழுக்கை யுடையான் சீதக்
கங்கைமதிச் சடையுடையான் கவினே யுள்ளான்
விண்ணுடையா னெரியுடையான் பவன கன்னீர்
விரிந்தபடத் தனர்தன்முடி மிலைந்து தாங்கு
மண்ணுடையான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (1)

குணமுடையான் றனதங்க முமைக்கா மொற்றைக்
கூறுடையான் கைப்படையே கொள்ளும் பூக
கணமுடையான் செறிந்தசடைக் காடே யுள்ளான்
கட்டழலே யெனப்பில்குங் கடுவாய் நாகப்
பணமுடையான் றணவுடையான் பற்றி லார்க்கே
பண்வேதப் பரியுடையான் பணிசேர் கொன்றை
மணமுடையான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (2)

தோலுடையான் வாலுழுவை நால்வர் வாயின்
ஓதியுடையான் முத்தலையாய்த் தோன்று கின்ற
வேலுடையான் வெம்மைவிலை யுடையா னம்மா
வினைதவிர்ப்பா னெனதுசென்னி மீதே வைத்த
காலுடையான் கடுவுடையான் கருது முண்மைக்
கவினடியார் செம்பமெனுங் கலியை மாற்று
மாலுடையான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (3)

தோடுடையான் பானிறவெண் பூதி மெய்யிற்
றோய்வுடையா னமரர்குழாஞ் சூழ்ந்து போற்றும்
பீடுடையான் பல்லூழி காலத் தென்றும்
பிறழாத நிலையுடையான் பேரூர் மோட்ச
நாடுடையான் நம்மையென்று முடையான் றொண்டர்
நலிவுதவிர்த் தருள்மிகவே நல்கு மொற்றை
மாடுடையான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (4)

வேதத்தன் றனைப்பணித்த பாலன் றன்மேல்
விரைந்துவந்த வெங்கூற்றை விழவு தைத்த
பாதத்தன் பற்றலர்முப் புரந்தீ யாகப்
பரிவுடன்புன் னகைபுரிந்த பரமார்த் தத்தன்
போதத்தன் புரந்தரன்மால் போற்று மத்தன்
புண்ணியமில் பொய்மையினேன் புன்னெஞ் சத்தன்
மாதத்தன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (5)

நத்தத்தன் சேயமுதா யிரணி யன்றன்
றூனுடற்புண் ணீரதனை நசையோ டுண்டு
பித்தத்தன் போன்றவக்காட் சிம்பு ளாகப்
பிறங்கிவந்து வலிகெடுத்தப் பேதந் தீர்த்த
சித்தத்த னன்பர்தன்பாற் றிகழ்நே சத்தன்
சிந்தனைகள் சிறிதேனுஞ் செய்யார் பாலுன்
மத்தத்தன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (6)

தொலைவில்லான் வரவில்லான் சொந்த மில்லான்
அகதில்லா னிகழ்வில்லான் சோக மில்லான்
உலைவில்லான் யாவினும்பற் றொன்று மில்லா
னுறுப்பில்லான் றப்பில்லா னுயர்ந்த மேருச்
சிலைவில்லான் வணங்கார்க்குச் சேவை யில்லான்
சீரடியார் தமக்கருளே செய்யச் சற்று
மலைவில்லான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (7)

உருவில்லான் றருவுதற்கு மேல்கீ ழில்லா
இணையில்லான் விருப்புவெறுப் பொன்று மில்லான்
அருவில்லான் பெண்ணுமில்லா னாணு மில்லா
னலியில்லான் மெலிவில்லா னங்கிங் கில்லான்
கருவில்லான் றத்துவங்கள் காண்டற் கில்லான்
கணக்கில்லான் வழக்கில்லான் கருதும் வெற்றி
வருவில்லான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (8)

ஆதியில்லான் நடுவில்லா னந்த மில்லா
னன்னைதந்தை யாருமில்லா னூரு ரில்லான்
சாதியில்லான் றமரில்லா னயலு மில்லான்
றனதில்லான் போற்றார்பாற் றயவே யில்லான்
நீதியில்லா னென்றெவரு மிகழ்ந்தற் கில்லா
னேர்ந்தெளிதில் வென்றிடவே நினைக்க வென்றும்
வாதியில்லான் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (9)

நண்ணத்தன் றுதிபுரிந்தோர் கலியை மாய்த்து
நற்கருணை யன்பினொடு நயந்து நல்கும்
எண்ணத்தன் வேதண்டத் தேரு ரத்த
னிசைந்திடுபொற் கயிலையில்வீற் றிருக்கு மத்தன்
அண்ணத்தன் னொருபாகத் தரிசே ரத்த
னணுவுமன்ப ருளமகலா வத்தன் செந்தீ
வண்ணத்தன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (10)

வாகனத்தன் முகுந்தன்மலர்ந் திடவே வன்னி
மலையுருவாய்த் திகழ்கடுக்கை மாலை வேய்ந்த
வாகனத்தன் போன்பாற் கமலக் கண்ணை
வாங்கியணிக் கடிபணிய மகிழ்ந்தே தானுய்
வாகனத்தன் றனக்காழிப் படையை யீய்ந்த
வள்ளல்பரா பரனடுக்கல் வலிசேர் குண்டை
வாகனத்தன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (11)

நாணுற மான்புகழே துதித்தி டாம
லலியுமிந்தச் சகவாழ்வை நாடி நாடி
வாணாளை வீணாளாக் கழித்தா யந்தோ
மையலுறும் பித்தேற்றி வைத்தார் யாரே
பூணுநுங் கைவலைகொண் டியம னாளைப்
போந்ததினைத் தென்சொல்லப் போகின் றாய்நீ
மாணார மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (12)

பண்டுசெய்த வினைப்பயனாற் சென்ம முற்றாய்
பலகாலும் பணத்தைமிச்சப் படுத்த வெண்ணங்
கொண்டுழன்றாய் குறிப்பறியாக் கோமுன் சென்று
குறைதவிர்க்க வுத்தியோகக் கொள்கை பூண்டு
தொண்டுசெய்தா யதனாலென் பெற்றாய் நீயே
சூட்சியுனக் கின்னமுநான் சொல்வேன் கேளாய்
வண்டுலவு மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (13)

திடம்படவாழ்ந் திடுவதற்கே யெண்ணி யெண்ணிச்
செய்தொழில்கள் பலபுரிந்து இருமை யுற்று
மடம்புகுநா யெனவலைந்தாய் வாது செய்தாய்
மற்றுளகா ணிகள்விரிவாய் வாங்கிச் சேர்க்கக்
கடன்பட்டாய் நிவிர்த்தித்தா யென்பெற் றாயோ
கவலையொழித் தினிவீணாள் கழித்தி டாமல்
வடம்படுதோன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (14)

இணக்கமுட னெத்தனையோ நீதி யெல்லா
மெடுத்தெடுத்துப் புகட்டியுஞ்சற் றிசைந்தி லாயேற்
குணக்கெடுக்க நாய்வாலைக் கூடா தென்னுங்
கொள்கைத்தா மேபுரிநற் குணத்தைத் திட்டுங்
கணக்கெடுத்துப் பார்த்துசமன் வாரா முன்னங்
கண்டுபிழைத் திடவிதுவே காலஞ் சொன்னேன்
வணக்கமுடன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (15)

சூது சொல்லி நயம்பேசிச் சோபங் காட்டிச்
சொத்தமுமை யல்லாது துணைவே றில்லென்
வாதுமக்கென் னுடனுமோ விட்டு விட்டு
வருவீர்நம் மனைக்கென்றே மறித்தி ழுத்துச்
சூதுமெத்தப் புரிந்துவையிற் பணத்தை முற்றுஞ்
சுற்றுகின்ற தோகையர்பாற் சுழன்றி டாமல்
மாதுபங்கன் மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (16)

எட்டுணையே யும்பிரியே னும்மை நான்விட்
டிதுசாத மிறக்கிலொன்று மிறப்பே னென்றக்
கட்டுரையே செப்பசப்பிப் பொருள்களைக் கொண்டு
கனிவசனத் தாலவரைக் கடிது போக்கிப்
பட்டுடையின் னியுமறு கணவர்த் தேடிப்
பரித்தணையும் பாவையர்தம் பாச நீக்கிச்
மட்டுறுந்தார் மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (17)

செங்கன்றுக் குத்தியில்லை புல்லாக் கில்லை
திருநாட்குச் சேலையில்லை செலவுக் கில்லை
கொங்கலர்தா மணிசடைக்கு நாக மில்லை
குனிமுலைக்கோ ரவிக்கைமுத்துக் கோவை யில்லை
யிங்கதற்குப் பொருடருவீ ரெனப்ப றித்தே
யிசைந்துபுண ராயிழையா ரிணக்க நீக்கி
மங்கலஞ்சேர் மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (18)

எதிரகத்தென் போல்வாளை யோர்காண் மட்டு
மிணங்கவந்த சிவகாமி யினிதன் பாகக்
கதிர்விடுபொற் பவன்மாலை கண்டைச் சேலை
யார்ச்சம்பா நூற்றிருபான் கலநெற் றந்தான்
விதியளிக்க வகைகெட்டீ ருமக்கிங் கென்ன
நேசமென்னும் நீலியர்க ணேயம் விட்டு
மதிமிலைந்த மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (19)

மனப்படியே பொருடினமும் வழங்கா ராயின்
மஞ்சமிசை கிடந்துதலை வலிக்கு தென்பாள்
சினப்புறுவாள் சுற்றிவந்து சேவித் தாலுஞ்
சிறிதுமெழாள் மாதவிடை திகழ்ந்த தென்பாள்
இனப்பழிப்புண் டாச்சுதுமை யிணங்கே னென்பா
ளித்திரஞ்சேர் விலைமாத ரிணக்க நீக்கி
வனப்புடைய மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (20)

நன்னயத்தெதம் மடமயிலை யன்பால் வந்தோர்
நாளனைந்தீ ரகன்றீரந் நாளே தொட்டுத்
துன்னுகுழற் கோதியிடாள் பேச்சு மற்றாள்
சோறருந்தாள் பாலருந்தா டுயிலை நீத்தாள்
என்னதுபாக் கியம்வந்தீ ரினிதாய்ச் சேர்வீ
ரென்றிடுந்தாய்க் கிழவிமொழிக் கிணங்கி டாமன்
மன்னவனெம் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (21)

கொடுக்கும்வரை துதிபுரிந்து கூடச் சாருங்
கொள்கைதனைக் காட்டியப்பாற் கொடுக்க வேலா
இடுக்கண்வரின் முகநோக்கா ளென்முன் னில்லா
யேடாபோ டாவென்பா ளில்லம் விட்டு
முடுக்கிடத்தாய்க் கிழவிகையின் முறமெ டுப்பாள்
மோசமுள்ளா ரிவர்கண்மயன் முழுதும் போக்கி
மடுக்கணிறை மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (22)

நாய்ச்சுவைபுல் லாமனைக்கு நத்தைச் சூரி
நரிக்கொம்போ டியின்பித்து நயஞ்சேர் காந்தம்
பேய்ப்புடலோ டாடையொட்டி மாட முட்டை
பெருகுசுரோ ணிதத்திலைதைப் பிசைந்த ரைத்து
வாய்க்கினிய ரசங்கூட்டி யுண்டை செய்து
மருந்திடுவா ருறவகற்றி மரண சென்மம்
மாய்த்திடுநன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (23)

பாவிலே மருந்துகண்டா யிந்திய நாற்றப்
பாய்கண்டாய் விடங்கலந்த பாக்குங் கண்டாய்
தோலிலே வியர்வையினீர் நாற்றங் கண்டாய்
சுற்றத்தார் பலர்பழிக்குஞ் சொல்லைக் கண்டாய்
மேனிதன்கோ லெங்காணப் போகின் றாயிவ்
வேசையர்தம் பற்றனைத்தும் வெறுத்துள் ளன்பால்
வாசியதன் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (24)

ஆன் னுசிர நான்குடைய வயனைக் குட்டித்
துன்புசிறைப் படுத்தியவன் றொழில்கைக் கொண்டு
மின்னுமயில் விடுத்தசுரர் குலங்க டைத்து
விண்ணரசை மகபதிக்கே வியப்பா யீய்ந்து
என்னுளமுங் குடிகொண்டே யடிமை கொண்ட
வெழின்முருகன் றனைமகவா யீன்றோ னம்மா
மன் னுபுகழ் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (25)

தந்தைதாய் மகவொக்கல் தாரந் திவ்ய
தனதானிய மாடுயர்ந்த தானக் கோவை
வித்தைசெறி மணிமாட மிவையா ராயின்
வெறும்பிலுக்காய் நிலையிலதாய் விளங்க லாலே
சந்தையிற்கூட் டுறவெனவே யதனி லன்பு
சற்றேனு மின்றியுண்மை தானாய் நின்று
வந்தனையாய் மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (26)

இணங்குவா யென்றல்லோ நீதி யெல்லா
மெடுத்துரைத்தே னன்பினுட னின்பா லுட்டேஞ்
சணங்கணைக்கட் டவிழ்த்துவிட்டான் மலமே யின்னச்
சுற்றுகின்ற குணம்போலுன் றொழிலு மானால்
ணங்கவொழித் தரியமுத்தி நிலையி னிற்சேர்க்
குய்வதென்றோ வறிகிலேயென் னுரைதன் னாமன்
ணங்கமழு மலைசைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (27)

தாங்கொடுப்பான் பண்ணவர்நாட் டாசு செய்யுந்
தருணமதிற் சலியேலென் றபய மான
காங்கொடுப்பான் றனவனுக் கண்டு நிற்குங்
கண்கொடுப்பான் றனதுளத்திற் கருதற் கெட்டாப்
பாங்கொடுப்பான் மற்றிவைபோ லடைதியோர்க் தாளும்
பலிக்கவென்று தினந்தினமன் பாக நல்ல
வாங்கொடுப்பான் மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (28)

சிந்திடுவான் சிந்தையினு குலங்கண் முற்றுஞ்
சீரருளை யுன்னியொன்றைச் செய்தாற் றனே
முந்திடுவான் செனனபிணி முடித்தற் கென்று
மூவாத முத்திநிலை முயலு மார்க்கந்
தந்திடுவான் பல்லூழி நிலைபெற் றோங்குந்
தன்பதத்தைத் தயவாகத் தானே யுன்முன்
வந்திடுவான் மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (29)

பொன்னகர்க்கோன் றவமுனிவர் புனித னந்தோன்
போதனிமை யோரனைப் புகழ்ப்பேர் கொண்ட
நன்னகர்க்கோன் நாகருல கத்தோர் நாள்கோள்
நாடுபொழின் மேவிடுரு தவன மான
இன்னகர்க்கோன் முதலான கிரித லைச்சூழ்
தென்றும்வலம் வந்திறைஞ்சு மியல்பா லியார்க்கும்
மன்னகர்க்கோன் மல்லைமகா தேவன் பொற்றாள்
வழுத்தியனு தினமுமுய்வாய் மடமை நெஞ்சே. (30)

மண்டலத்தோர் களுமுய்யும் வகைய தாக
வழுத்தியவிந் நூல்வாழி மனத்து ளன்பாய்க்
கொண்டவர்கள் பிறர்க்குரைத்தோர் அதித்தோர் வாழி
கொற்றவர்செங் கோல்வாழி குடிகள் வாழி
தண்டலைசூழ் நாதகிரி வாழி மெய்ம்மைச்
சண்முகனென் குருநாத சாமி வாழி
வண்டமிழார் மல்லைமகா தேவன் வாழி
மரகதத்தா யெந்நாளும் வாழி வாழி. (31)

( நெஞ்சறி விளக்கம் முற்றுப்பெற்றது. )

---

# 5. மரகத வல்லியம்மை பதிகம்.

காப்பு வெண்பா. பின்முடுகு.

மாமலைசை வாழு மரகதத்தா யாமுமைமேற்
சேம மிகுபதிகஞ் செப்புவாம்—வாமமிகு
தும்பிமுகத் தொங்குகுடத் தொந்திவயிற் றைந்துகரத்
தெம்பரனைச் சிந்தையுள்வைத் தே.

## நூல்.

ஆசிரியப்பா. பதிநான்கடி.

சீர்பெருகு தருமமென் பதுவெனது கனவினுஞ் சிந்தையுட் சற்று மெண்ணாச்
சிறியனே னெனினுமுன் சரணகம லங்களைத் தினமுந் துதித்துய்ய வே
ஏர்பெருகு மிதையமுஞ் செல்வமிகு கல்வியுட னினியசுக மென்று மீவா
யெங்குநிறை செல்வியே மங்கையர்க் கரசியே யெழினா ரணன்றங்கை யே
நீர்பெருகு சுனையிலெழு திரையோசை கரைதனி னித்தனைச் சித்தம்வைத்தே
நேயமொடு துதிசெய்யு மடியார்க ளோசையுயர்நீண்மறைகளோதுமோசை
வார்பெருகு பழனமுழு மள்ளர்தம் மோசையும் வழுவாதெ நாளு மோங்கு
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே. (1)

மூவரா னவர்கட்கு முதல்வனு மந்தமு முதலுமில் லாத வேத [ன்மீதே
மூர்த்தியா முன்னிருவர் முனிவுகெட மண்ணினின் மூலைத்தமுக் கண்ண
ஆலவா னதுகொண்ட வங்கயற் கண்ணியே யாதிசிவை யேயன் னையே
யாதரவி னோடுசிவ நேயமிகு தொண்டர்கட் கமுதளித் தவர்க ளேவும்
ஏவலா னதுசெய்து நின்னடி துதித்துய்யு மெண்ணம தெனக்க ருள்வையே
யிருகரையு மேபெருகி யொழுகுபுன லூடருவி யெக்களிப் புடனு லாவு
மாவரா லின்குட்டி பூகமதை யேயெட்டி மங்குலிற் றாவி வருசீர்
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே. (2)

இன்னமென் மேலும்வே றன்னைதன் னுதரத்து ளெய்தாத வண்ணமே செய்
திகபர மிரண்டிலுஞ் சுகமிகுந வின்புற்று னிணையடி தனைத்து திக்கு
நன்னய குணங்களுஞ் சொன்னய முடன்றமிழு நாளுமே மிகுதி யீய்ந்தே
நாரிபரி பூரணிநல் வீரிமக மாகியே நற்சிலைக் கிறைசெல் வியே [யந்த
கொன்னவிலு மயில்கையின் மன்னுமெழில் குடிகொண்ட குமரன்ற னைப்ப
கோதைகுழல்வாய்மொழிநீதயவுசெய்தெனதுகுறைதவிர்த்தாட்கொளம்மே
வன்னமயி லுங்குயிலு மின்னிசையொ டும்பயிலும் வானுலவு பொழிலு மேவு
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே. (3)

அன்னையே பிள்ளைபல குற்றங்கள் செய்திடினு மவைபொறுக் கானாயின் வே
றாரெனைத் தாதரவு செய்திடுவ ரியானுநின் னருமைமக வல்ல வோசொல்
நின்னையே சதமென்ற வென்னையே கைவிடி னின்புகழ்க் கழ காகுமோ
நீலிதிரி சூலிதிரு பாலிநய சீலியே நிலமளந் தோன்றங் கையே
முன்னையே தந்தவிர நின்னருளை நாடிடவு முயல்கையிலென் மூர்க்க நெஞ்சம்
முன்னுக் கிழுக்கையிற் பின்னுக் கிழுக்கின்ற மூடமதை நீக்கி யாள்வின்
மன்னையே தாங்குதண் கார்தவழு சூதமொடு வாழைகள் பழுத்தி லங்கு
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே.(4)

அந்த[illegible]யெல்லையில் லாதபர யோகவெளி யத்தனையு மேநி றைந்த
வரதியா மேஸ்பரி கோகிலகிரு பாகரி யகிலமெய் வாத சீலி
சிந்தா குலந்தவிர்த் தெந்தவித முங்கிருபை செய்துசிறி யேனு முன்னாட்
செய்தபிழையோடினிச்செய்பிழைகணீக்கிநின்றிருவருளெனக்குமுற்றுத்
தந்தாள வேநல்ல சமையமிது புன்மையேன் சாற்றுவது தவறு மொழியோ
தாயுமறி யாதருள் தானுமுள தோநினது சரணமது தஞ்ச மம்மா
மந்தார முல்லையொடு பிச்சியிரு வாச்சியுயர் வாசகந் தளவ னஞ்சூழ்
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே.(5)

எங்குநிறை யும்பொருளு முயர்குருவு நீயெனவுனிணையடியிறைஞ்சுமெளியேற்
கெத்தனை பெருங்கவலை வைத்தனை யொருத்தநா னித்தனைக் காளாவனோ
கொங்குகமழ்மாலைதிகழ்கொங்கைமடமங்கையர்கள்கோண்மாயவலைவிலக்கிக்
குறையற்ற வாழ்வுநற் சுகமுற்று மீய்ந்தெனது குடிமுழுது மேபு ரந்தாள்
செங்குமுத மலர்வா யிலங்குகய லேவிழிக டிங்கணிக ரானனஞ்சேர்
சின்னஞ் சிறுத்தவிடை கன்னங் கறுத்தகுழறென்னங்குரும்பைமுலையாய்
மங்குலுல வும்பொழில்கள் சங்குதவ ழும்பழன வளமது செழித்தி லங்கு
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே. (6)

நேசமுட னுனதடியை யோர்கணம தாயினு நினைக்கவறி யாத மூட
நெஞ்சமுடை நாயினே னென்குணமி யாவுமே நினதுதிரு வுள்ள மறியும்
பாசமிகு சேய்களிற் பொல்லாத சேயொன்று பரிவுட னிருக்கி னதையும்
பாதுகாப் பின்றியே தாய்தள்ள னீதியோ பழமறைக டேட வறியாத்
தேசவிரு மதிவதன வல்லியே புன்மையேன் செய்பிழைகளைப்பொ றுத்தென்
றெவ்வர்களை வேரறுத் தின்னலை யொழித்துனது சேவடித் துதிக்கவருள்வாய்
வாசமது கமழுமகி லாரமொடு சூதமுயர் வர்க்கைசெறி தண்பொ ழில்கள்சூழ்
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மரகத வல்லி யுமையே. (7)

படிதனி லெறும்புகடை யானைதலை யாருமென் பத்திறெண்டு காலி லக்கம்
பல்லுயிர் களுக்குளுயர் மானிடச் சென்மம் படைத்தென்று மேபுரர்த்தென்
குடிமுழுது நின்னடித் தொண்டுசெய வேயடிமை கொண்டதிரி சூலி சீலி
குறைவேது மில்லாத தவநேய வாழ்வுங் கொடுத்தனை து கருணை செய்தாள்
கடிகமழ் பலாவினங் கனிகவரு மற்கடங் களைவிரட் டிடவு மள்ளர்
கழிஇயொருகோடெடுத்தெறியவிளநீர்க்குடிர்ந்தெதித்தலையுமெறிதேன்
வழிமலர்ச் சோலைகளு நெற்கதிர் செறிந்திலகு வயலூரற் கயமு மேரும்
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மாகத வல்லி யுமையே. (8)

வாதுசெயு மவுணர்குடி வேரறத் தண்டர்தம் வன்றுய ரகற்ற வேண்டி
வரிசிலை யெடுத்தவனை வாசமது சென்றவன் மாருதியின் வர்க்க மதனுற்
சேதுவது கட்டிலங் காபுரியின் மேவித் திடங்கொளதி காய னிந்திர
சித்தரும் பகர்னரா வணராதி முடிகொய்து சீதைதன் சிறையை மீட்டித்
தீதுகுண மறியாத வீடணர்க் குச்சிரஞ் சீவியுட னரசு தந்த [செய்பொன்
செங்கண்மால் சோதரி யென்குறைக ளியாவுந் திருத்தியுன் கருணை [ம்
மாதுகுடிகொண்டுவளர்வனசநிறையனமூமுறைவண்மைமிகுதண்சுனைகளு
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மாகத வல்லி யுமையே.(9)

சொல்லரிய நின்பதந் தஞ்சமென வெண்ணித் துதிக்கின்ற வேழை யேனைச்
சோதிக்க வெண்ணிநீ துன்பது புரிந்திடுதல் துரைமக ளுனக்கு முறையோ
அல்லலுறு வனவேனு மொருபோது மனுகாத வருளளித் தனது துதியை
யனுதினமு மறவாது பாடிநா னுய்யநல் லன்புமிக வேகொடுத்தாள்
கல்லதனை வில்லதா கக்கண்ட மைக்கண்ட கண்ணுத றனக்கு வாய்த்த
காரணி நித்தியபரி பூரணி நாரணி கஞ்சமலர் நேர்ப தத்தாய்
மல்லல்செறி சூதவன மேவுபைங் கிள்ளைகளு மறைகணித நிதம்வ ழுத்தும்
மாமலைசை யம்பதியின் மாதேவர் பங்கில்வளர் மாகத வல்லி யுமையே.(10)

சதுர்மறைகள் வாழியா கமபுரா ணம்வாழி தவநேய முனிவர் வாழி
தந்திமுகன் வாழிசண் முகன்வாழி தெய்வானை தாய்வள்ளி தாமும் வாழி
பதுமபீ டத்திலுறை கமலையயன் வாழிமால் பண்ணவரும் வாழி யித்தப்
படியின்மிசை முடிமன்னர் வாழியிந் நூலைப் படிப்பவர்க ளெவரும் வாழி
பொதுவிலிவ் வுலகம திருந்திடத் தென்பொதிகை புக்கிவளர் முனிவர் வாழி
புகழ்மேவு சிவனடியர் வாழிவிப் பிரர்வாழி பொன்மாது வாழி யினிய
மதுநதிய தாகவெழ வனுதினமு மலர்கள் சொரி வனநாதகிரியும் வாழி
மாமலைசை வாழியுயர் மாதேவர் வாழிமா கதவல்லி தினம் வாழியே. (11)

(மாகதவல்லியம்மை பதிகம் முற்றிற்று.)

---

# 6. நாதகிரி முருகக் கடவுள்மீதியற்றிய வேற் பதிகம்.

காப்பு வெண்பா.

ஞதவன மாமுனிவர் தொல்புவியோர் போற்றிசெய
நாதகிரி மீதமர்ந்த நாதாநின்—மீதியான்
ஓதுந் தமிழ்தழைக்க வன்னருட்கண் பார்த்திடுவாய்
மாதுகுற வள்ளிகண வா.

நூல். அறுசீரடி.

பூதலத்தின் மணிச்சுடரா யொளிபெருகி யருள்கொடுக்கும் புனித மான
நாதகிரி வாழ்குகனே யத்தனுக்கு மருகோனே நான்கு வேதம்
பாதசிலம் பாயணிந்த பண்ணவனே யடிமையையுன் பணிக்கே கொள்வாய்
மாதவத்தோர் தொழுதேத்து மயூரவா கனமுருக வடிவேல் வேளே. (1)

அகிலாஞ் செறிபொழிலஞ் சூழலவ வுறுதமக்கா தார மாக
முகிலினம்வந் தமுதூற்று மலைசூழ்நகர் நாதகிரி முருக னேநின்
மகிமைதனைச் சொல்லவென்று லெனக்கெளிதோ மறையறியா வடிவுளானே
சுகிர்தசுக வாழ்வினைத்தான் தந்தருள்வா யயிலேந்து சுமுக வேளே. (2)

வண்டறைபூ மதுவாறுய்க் கடன்மிதிப்ப வதனையுண்ட மச்சந் தோடு
கொண்டல்படிந் தலைவிருகோடுடைக் குஞ்சரப்பெடையாய்க் குதித்தலாவுந்
தண்டலைசூ ழிவளஞ்சேர் நாதகிரி வாழ்குமர சாமி யுன்றன்
தொண்டனெனை யருள்புரிய விதுசமையம் வந்துதவு சுமுக வேளே. (3)

வண்ணமயின் மீதிலங்கி மணிநாத கிரிவசிக்கும் வடிவேற் கையா
நின்னடிமை யானல்லவோ நீயெனக்குக் குருவல்லவோ நிமல நாதா
வன்னதுகத் தெரிசனைதந் தடியனேன் கேட்டும்வா முவந்தே யீவாய்
பொன்னன்கிரிர் இரங்கவா மயில்விழிக்குஞ் சரிபுணரும் புனித வேளே. (4)

பண்டைசார் குலமறத்தைப் பலமுனிவர்க் கருள்கொடுத்தப் பதமு நீரொன்
றண்டர்துயர் தீர்த்திலைத்த வாறுமுகா வரிமருகா வையக னேயிம்
மண்டலத்தின் சிரமிலங்கை மௌலியெனு நாதகிரி வாழ்வோ யுன்றன்
முண்டகத்தின் தெரிசனைதந் தெனையாள்வா யனவரத முருக வேளே. (5)

எத்திசைக்குந் தெரிசனையா யெழுதாத கிரிவலமா யெவர்வந் தாலும்
புத்தியொடு சுகவாழ்வு மேன்மையயுந் தந்தருளும் புனிதா வுன்றன்
பத்தியுட னனவரத நானினைக்கப் பண்பருளி யருட்கண் பார்ப்பாய்
சத்திவடி வேற்குமர சாமுகசண் முககுகமெய்ச் சந்த வேளே. (6)

திரிபுரம்வெண் ணீறுகச் சிரித்திடுமெய்ச் சேவகன்றன் சேயே யென்றும்
பிரியமுடன் றெரிசனைதந் தெனையாள்வா யனவரதம் பேரார் நாத
கிரியிலினி தாய்வசிக்குந் திருமுருகா குஞ்சரிதன் கேள்வ னேமுன்
அரியெனுந்தா னவரைவென்றே யரிநிறத்தா ரரிமருகா வரிவேல் வேளே.()

நன்னிலைமை வழுவாத மலைசைநகர் நாதகிரி நாத னேயங்
கன்னிவள்ளி குஞ்சரிதன் காதலனே கதிர்வடிவேற் கைய னேநா
னுன்னிணைமா மலரடியை நினைந்திடவும் புகழ்ந்திடவு முலக மீது
மன்னியவன் னியர்மாதை யுன்னிடா வண்ணங்கா வடிவேல் வேளே. (8)

நந்தன்மகன் றனைச்சிறையி லிட்டருகா பிறவிநோய் நாடா வண்ணம்
அந்தயவு கந்தனையே யறியவறி வுந்தவமு மடியேற் கீய
வந்தனது திருவுருவஞ் சிகியதனி லிலகிடவே வடிவே லேந்திச்
சந்ததமு மருள்புரிந்தாள் தனிமலைசைத் தனில்வளருஞ் சரத வேளே. (9)

ஊக்கமிகும்பொன்னயில்விட்டசூருடனனைத்துயிரையொழித்துவிண்ணோர்
ஏக்கமகன் றுவந்திடநற் கருணைசெய்த வெழின்முருகா வென்று மெந்தன்
வாக்கதனின் மதுரகவி யமுகதிரி புடன்வெண்பா வழுத்துங் கல்வி
ஆக்கமிக வருள்புரிந்தே யெனையாள்வா யானிடத்தா ளருளும் வேளே. (10)

( வேட் பதிகம் முற்றுப்பெற்றது. )

---

## 7. மலைசைச் சடாக்ஷரன் மாலை.

### விநாயகர் காப்பு.

பின் முடுகு வெண்பா.

மங்களஞ்சேர் நாதகிரி மலைசைச்ச டாக்ஷரன்மேல்
இங்கிதமா மாலை யியம்பவே—கங்கைபுனை
தந்தையைவ லஞ்செய்தொரு தண்கனிக வர்ந்தமுதல்
எந்தைசர ணங்கடுணை யே.

### நூல்.

கட்டளைக்கலித்துறை.

பூமேவு செம்பொன் முடியுங் கருணை பொழிமு கமும்
பாமேவு தண்கடம் பார்தின் புயமும் பதாம்பு யமும்
மாமேவு வேலுந் தலங்கச் சிகிமிசை வந்தருள் வாய்
தாமேவு நாத கிரிவாழ் மலைசைச்ச டாக்ஷரனே. (1)

முக்கணெம் மானுயர் மாதேவ னும்பர் முதல்வ னிடப்
பக்க முறையு மரகதத் தாய்மகிழ் பாலகின் மேன்
மிக்க புகழுடைப் பாமாலை சொல்லி விரைந்த ணியத்
தக்க தமிழெனக் கீவாய் மலைசைச் சடாக்ஷரனே. (2)

இத்தனி வேணியன் சேயே நிதனி னிரண்டு பொற்ப
தத்தினை யேசத மென்றேத்து மேழை தனக்கி னிய
செந்தமிழ் வாக்குத் திடமாக கல்வியென் சித்த மதிற்
சந்தத நின்றருள் செய்வாய் மலைசைச் சடாக்ஷரனே. (3)

முண்டகத் தோனும்வண் டார்துள வோனு முயன்ற வராற்
கண்டறி யாப்பொருட் குங்குருவான கடம்ப கிரிகே
தொண்டகத் தேனு முனைநாடி யுய்யுஞ் சுக்தரு வாய்
தண்டலை நாத கிரியாய் மலைசைச் சடாக்ஷரனே. (4)

வின்ஞான ஞனி னுறுந்துயர் தன்னை விலக்கி யச்ச
மென்று திருக்க வருள்புரிக் கோவென் னிடமொழி யப்
பண்ணு திருந்திடி னியாயமுன் டோசடம் பாகு மரா
தண்ணார் பொழில்வனஞ் சூழு மலைசைச் சடாக்ஷரனே. (5)

குற்றங்க ளெத்தனை தன்சேய் செயினுங் குறையெ னவே
பெற்றவன் பிள்ளையைத் தள்ளுவ னோசிறு பேதை யெற்குப்
பற்றுறு தாய்தந்தை நீயா யிருந்தும் பராமுக மேன்
சற்றுன் தயவுசெய் தாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (6)

முத்தைய னென்று மொழியே னவர்கள் மொழிந்திடி னுஞ்
சித்தம்வைத் தாகிலுங் கேளேனிவ் வேழையன் செய்பி ழைக
ளெத்தனை யாகினு நீயே தவிர்த்திங் கெனைப்பு ரப்பாய்
தத்தை மொழிவள்ளி பாகா மலைசைச் சடாக்ஷர னே. (7)

முந்தைக் குறைப்பய னென்றாலு மத்தை முனிந்த னது
சந்தத் தமிழ்கொண் டறுக்கரி தோநற் றயவுட னென்
சிந்தைக் கலிதவிர்த் துன்னடி யேதுதி செய்யு மன்பு
தந்தெப் பொழுதும் புரப்பாய் மலைசைச் சடாக்ஷர னே. (8)

ஒருபொழு தேனு முருகா வெனவென துள்ளன்பி னால்
மருமலர் சாத்த வறியாத வன்மன மாண்பி லிக்குங்
குருவென வந்து குறைதவிர்த் தேயருள் கூர்மலர்ப் பூங்
கருவுரி தன்மரு கோனே மலைசைச் சடாக்ஷர னே. (9)

காமலர்க் கானிற் றவஞ்சேர் தனபதி காத லர்க்கு
மாம னுருவெடுத் தம்பலஞ் சென்று வழக்கு ரைத்த
சோம னணிச்சொக்க நாதன்மைந் தாவருட் டொண்டி லன்பு
தாமத மின்றித் தருவாய் மலைசைச் சடாக்ஷர னே. (10)

கொங்கையி லார மிலங்குமின் னார்மயல் கொண்டு ழலுஞ்
சங்கையைத் தீர்த்துன் னருட்டா டுதிக்குந் தயந்தரு வாய்
செங்கையிற் சக்கரஞ் சங்கணி மாதவன் சீருமைத்
தங்கை யெனும்வல்லி பாலா மலைசைச் சடாக்ஷர னே. (11)

அஞ்சொன் றெழுத்தைத் துதித்தே யருள்பெற வாசை யெண்ணின்
மிஞ்சவ தாவது மாயாவி காரம் விலக்கி யுய்யக்
கஞ்ச மலரிணை நின்பதங் காட்டுங் கருணை யல்லாற்
றஞ்சமுண் டோவெனை யாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (12)

மதனுரு வைப்பொடி யாக்கிய கண்ணுதல் வாய்த்த பெம்மான்
சுதனென வந்தவ ருட்டே சிகவுண்மைத் தூய முத்திப்
பதமெனக் கேகொடுத் தெந்நாளு நின்னருட் பண்பீருள் வாய்
சதமகத் தோனக ரொப்பா மலைசைச் சடாக்ஷர னே. (13)

மருவா கியகொன்றை மாமாலை சூடிய வார்ச டிலன்
குருவா கியகும ராசிறி யேன்றன் குறை தவிர்த்துத்
திருவா கியதவச் செல்வமுங் கல்வியுஞ் சீரு முந்
தருவாய் பொழில்வலஞ் சூழ மலைசைச் சடாக்ஷர னே. (14)

அன்னஞ்ச மான நடைவள்ளி நாதநின் னாறெழுத் தை
யென்னெஞ்சி லன்புட னேர்பொழு தாகிலு மேத்த வென்னுக்
கண்ணொஞ்ச னுயினு நின்னரு ளீய்ந்து கலிதவிர்த்தென்
தன்னெஞ்சி னூடும் வளர்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (15)

முன்னம் பிறவிக் கடலோ பெரிதிந்த மோக மண்ணில்
இன்னம் பிறந்துழ லாவகை செய்தென் னிடரொழித்து
மன்னுங் கருணை யுடனே மயின்மிசை வந்து னது
தன்னம் பதமுந் தருவாய் மலைசைச் சடாக்ஷ ரனே. (16)

தூர்மதி வேணியன் சேயே யுன்றடித் தொண்டர் களின்
நோய்தவிர்த் தாள்வது நின்கட னேபசி நோக்கியழுஞ்
சேய்தனைக் கன்புடன் பாலூட் டிடாமற் றிகழ்மு லையைத்
தாய்மறைத் துக்கொள்வ துண்டோ மலைசைச் சடாக்ஷர னே. (17)

சிலையான வாணுதன் மின்னார்கண் மையிடுஞ் சேவிகர்க் கன்
வலையான தென்னை யணுகா வாந்தரு வாயெழி லா
விலையான திற்பள்ளி கொண்டவன் றங்கைக் கிசைந்த வைந்து
தலையான் றனக்குங் குருவே மலைசைச் சடாக்ஷர னே. (18)

காராரு மேனியின் மானமரு காவருட் கண்களி னுற்
பாரா திருக்கிற் றுணையாவ ருண்டெழிற் பங்கய மே
நேரா கியபொற் பதச்சேவை யன்புட னீயருள் வாய்
தாரார் கடம்பணி மொய்ம்பா மலைசைச் சடாக்ஷர னே. (19)

நம்பிய தொண்டர்க் கெளியாய் வினைத்துடர் நண்ணி மிக
வெம்புமென் னுள்ளக் கலிதவிர்ப் பாயடர் வேயு தித்து
அம்புலி யார்சடைக் காடுட னம்பலத் தாடி நின்ற
சம்புச தாசிவன் சேயே மலைசைச் சடாக்ஷர னே. (20)

பன்னகம் பூணிறை பாலாவுன் னம்புயப் பாத மதை
யென்னகந் தன்னி லகலா திருத்திட வெண்ணு மிச்சைக்
கொன்னல ரானபு லாதியை வென்றெனக் குற்றிட வுன்
றன்னரு ளீய்ந்து புரப்பாய் மலைசைச் சடாக்ஷ ரனே. (21)

பாற்கண்ட பூனை யதையுணாச் சுற்றிடும் பான்மை யைப்போல்
வேற்கொண்ட வாவுன் னருட்பா லினுக்கு விரும்பி நிதம்
மாற்கொண்ட வெற்கனை யீய்ந்தாள வென்முன் வாராம லிருத்
தாற்கண்ட வர்நகை யாரோ மலைசைச் சடாக்ஷர னே. (22)

அன்னையுந் தந்தையு னீயே யலதுமற் றுருணர் சொல்
என்னையுன் றொண்ட ரினத்தோடு கூட்டி யிடரொ ழித்துப்
பொன்னையுங் கொண்ட மணிக்கழல் சூழுமம் போருகத் தாள்
தன்னையுந் தந்தெனை யாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (23)

செல்லர் முடப்பிள்ளை யைப்பெற்ற வன்னை சிறிது மன்பே
யில்லா தகைக்கொன் றிடுவ துண்டோவெளி யேன்கு றைக
ளெல்லா மகற்றிநற் பேரின்ப வீடெனக் கேயருள் வாய்
சல்லாப மாமயில் வேலா மலைசைச் சடாக்ஷர னே. (24)

வேதா விதிப்பய னென்று லதையும் விலக்கிட லா
னாதா பலவித யாதா வெனது கலிதவிர்த் தாள்
மாதா வுமையவள் கண்டே களித்திட மன்றி னின்று
நாதாவென் றோடினன் சேயே மலைசைச் சடாக்ஷர னே. (25)

சேயா னதுவிளை யாடிமன் டின்று திரியி லன்னை
போயா வெனப்பற்றி யின்னமு தூட்டிப் புரப்பது போன்
மாயா விகாரச் செயன்மூடி யுன்னை மறப்பினு நற்
றாயாகி வந்தருள் செய்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (26)

என்பது பூணிக் கருட்டே சிகவென வேத்து மெனை
மின்பயி றந்தமும் பாசமு மூவிலை வேலி லங்குந்
தென்புலத் தார்கள் சிறிதுறு காவலை செய்து வந்துன்
றன்பதத் தாமரை யீவாய் மலைசைச் சடாக்ஷர னே. (27)

கொடுத்தா யியதமிழ்ப் பாமாலை சாத்தித் துணைப்ப தத்தை
அடுத்தாரை வாழ்விக்கு மாமுதே சிகநின் னருளெ னக்குக்
கொடுத்தா தரித்திடிற் குற்றமுண் டோவென் குறைமு ழுதுந்
தடுத்தாள்வ துன்கட னையா மலைசைச் சடாக்ஷர னே. (28)

மலங்கட் டியபுழுக் கூடாமிவ் வாக்கையின் வாழ்வை நம்பிப்
பலங்கெட் டலைந்திடும் பாநெஞ்ச மேயுண்மைப் பண்பு சொல்வேன்
நலங்கெட்டி யாய்த்தரு நங்குரு நாதனை நம்பு முத்தித்
தலங்கிட் டிடவர மீவான் மலைசைச் சடாக்ஷர னே. (29)

மழலை மொழிச்சிறு சேய்பேசும் வார்த்தையை வண்ண முநின்
அழகிய தென்று மகிழ்வார்க ளீன்றவ ரன்னது போற்
குழைவுட னேழைசொல் லின்னா விடத்தன்பு கொண்டருள் வேற்
றழுவிய செங்கை வரதா மலைசைச் சடாக்ஷர னே. (30)

இன்பம்வந் துற்றிடி லெல்லாமென் செய்கை யெனப்பு கழ்வார்
துன்பம்வந் தாற்சிவ னார்தனைத் தூசணஞ் சொல்லிடு வார்
அன்புட னேயச ரஞ்சர முற்று மளித்தரு ளுந்
தன்செய லன்றிமற் றுண்டோ மலைசைச் சடாக்ஷர னே. (31)

வினையின் பயன்களி னானேவு மெய்தனை வேதிக்கி னும்
உனைநம் பிடிற்றெருண் டுய்வரென் றேமறை யோதும் வெட்சி
வனையுங் கழற்கடி யேன்றனைப் புன்பிணி வாட்டிடி னுன்
றனையிங் கெவர்களு நம்பார் மலைசைச் சடாக்ஷர னே. (32)

திருமா லயனு மறியா வடிமுடிச் செம்ம லுக்குங்
குருவா யெழுந்துப தேசித்த நின்னடிக் கொத்த டிமைப்
பெருவாழ்வு நற்சுக மெய்த்தவ மீய்ந்துநற் பேரு ளுந்
தருவாய் தினமு முவந்தே மலைசைச் சடாக்ஷர னே. (33)

அஞ்சா தறிவுட னைந்தெழுத் தோதி யருள்பெற வென்
னெஞ்சா னதுநன்பு கொண்டிடு மெய்த்திட நீயருள் வாய்
செஞ்சாலி வாய்ந்த பழனங்க ளம்புயஞ் சேர்தட மொத்
தஞ்சார் வளமிகுந் தோங்கு மலைசைச் சடாக்ஷர னே. (34)

முன்னாட் பொதிய முனிக்குப தேசித்த முத்தமி ழில்
இன்னு மெனக்குச் சிறிதாயி னுங்கொடுத் தேயினி தாய்ப்
பன்னாளு நின்பதம் பாடிப் பரவும் படிப ணித்தே
தன்னா ளடிமையென் றாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (35)

செண்டே நிகர்தன வள்ளிதன் பாகநின் சேவ டிக்கே
தொண்டே புரியு மெளியார் வினையைத் துணித்திட வே
ஆண்டேயுன் பாலன் றன்னையு மாட்கொண் டுவந்தருள் வாய்
தண்டே மலரின் வளஞ்சூழ் மலைசைச் சடாக்ஷர னே. (36)

நினக்கே யடிமை புகுந்தா றெழுத்தை நினைந்து தினம்
மனக்கோ தகலச் செபித்துன் மலரடி வாழ்த்தி யுய்ய
எனக்கே சுதந்தர முண்டுகண் டாய்வந் தினிதெளி வேன்
தனக்கே யுகந்த வரந்தா மலைசைச் சடாக்ஷர னே. (37)

ஊரிருந் தாலுமுற் றாரிருந் தாலு முவந்து பெற்றோர்
பாரிருந் தாலுமிங் காவதுண் டோநின் னகம கிழ்ந்து
வாரிருந் தோகையி லேறிவந் தென்கலி மாற்று வெட்சித்
தாரிருந் தேகமழ் மார்பா மலைசைச் சடாக்ஷர னே. (38)

வண்டே குடிகொள் குழல்வள்ளி குஞ்சரி வார்த னஞ்சேர்
திண்டோ ளுடைய வயிற்கைய னேநின் றிருவ டிக்கே
தொண்டே புரியுந் தொழிற்கென்னை யாக்கிச் சுகந்தரு வாய்
தண்டே னொழுகும் பொழில்சூழ் மலைசைச் சடாக்ஷர னே. (39)

தேனே செழுஞ்சுட ரேயடி யார்க்கருள் செய்திடும் பெம்
மானே மரகத மேகுஞ் சரிமகிழ் மாணிக்க மே
பானேர் மொழிகுறக் கோமகண் மீதென் றும் பற்றுறு செஞ்
சானே யெனக்கருள் செய்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (40)

நினைவுக் கெட்டாத பழம்பொரு ளேயன்பர் நேய மொடு
புனையுங் கவிக்கின் னருள்கூர்ந் திடுஞ்சுத்த போத சிவா
வனையுந் தமிழ்ச்செல்வ வாழ்வுடன் வேண்டு வரமளித் தென்
றனையுங் கருணைகொண் டாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (41)

பெண்டுகள் பிள்ளைக டாய்தந்தை மித்தரை பேர்க ளூர்த்தன்
அண்டையி லேயிருந் தாலுஞ் சமனை யகற்றுவ ரார்
மூண்டகப் பாத முருகனென் றேத்தி முயன்றிடி லச்
சண்டனண் டாதருள் செய்வான் மலைசைச் சடாக்ஷர னே. (42)

காயேன் செயுஞ்செய லேதறியே னிந்த ஞால மதில்
நீயே யெனது பிழைபொறுப் பாயன்பு நீடு சொந்தச்
சேயே பலகுறை செய்யினுங் கோபஞ் செயன் முறையோ
தாயே யெனவெனை யாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (43)

கனைக்குங் கடற்றுயின் மான்மரு காநின் கருணை யன்பர்
நினைக்குந் தொறுமவர் முன்வந்து மஞ்ஞையி னிற்ப வனை
கனைக்குங் குழன்மட வார்மய லேசிக்கி னாலு ழல்வே
தனக்கு னருள்புரிந் தாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (44)

ஆற்றினி லங்கண நீர்சேரி லத்தைத்தள் ளாது போற்
போற்றிடு நின்னடித் தொண்டர் குழாத்திற் புகுந்து குறை
மாற்றிட நல்லரு ளீவாய் அதியிது வண்ட மிழ்ப்பாச்
சாற்றிடு மன்பர்க ணேயா மலைசைச் சடாக்ஷர னே. (45)

பொன்போ லிலங்கு மயிலுடை யாயிந்தப் பூத லத்தில்
என்போன்ற வேழைக் கிரங்கு பவாதமி யேனு முய்ய
அன்போடு நல்வர மீந்தே கருணைவைத் தாண்டருள் வாய்
தன்போ னிகரின்றி வாழ்வோய் மலைசைச் சடாக்ஷர னே. (46)

பாழான வென்மனஞ் சேல்விழி கொண்ட பரத்தையர் பால்
வீழா திருக்கப் புரிந்தேதுற் கன்ம வினையொ ழித்து
வாழாத குற்றமும் பன்மலர் தூவிநின் மாணடி யைத்
தாழாத குற்றமுந் தீர்ப்பாய் மலைசைச் சடாக்ஷர னே. (47)

சூழ்வே னினைதன் பணுவுமில் லார்தமைத் துன்னு பொருள்
வாழ்வே விரும்புவன் வஞ்சக மங்கையர் மையலி லே
வீழ்வே னுனைவணங் கேனினி யேனுமிவ் வெய்ய கொடுந்
தாழ்வே யுறுமற் புரப்பாய் மலைசைச் சடாக்ஷர னே. (48)

பார்மேவு மானிடச் சென்மங் கிடைத்த பயனடை யச்
சீர்மேவு கல்வியு ஞானமுஞ் சீலமுஞ் செங்க மல
நேர்மேவு நின்னடிக் கன்புங் கொடுத்தரு ளீப மலர்த்
தார்மேவு பன்னிரு மொய்ம்பா மலைசைச் சடாக்ஷர னே. (49)

செங்கர மீது மழுமானும் வார்சடை சேர்ம தியும்
பொங்கர வுங்கொன்றை மாலையு மென்பும் புனைந்த பெம்மான்
பங்கினில் வாழ்பவை பாலாநின் கீர்த்தியைப் பாடு மன்பு
தங்கிட மெய்யருள் செய்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (50)

வாரணி கும்ப முலையின்மின் னார்கண் மயக்க மொழித்
தேரணி யுன்பத மேத்திடு மெய்த்திட மெற்கருள் வாய்
காரணி கண்ட னருள்சுத னேகட் கவிழ்க டப்பந்
தாரணி பன்னிரு மொய்ம்பா மலைசைச் சடாக்ஷர னே. (51)

ஏன மனமன் றறியாது தேட வெரியு ருவ
மானவன் றன்குரு வானவ னேநின் மலரடிக் கா
ளானவ னென்றெனை யாண்டே யெநாளுநல் லன்புட னே
தானருள் செய்ய வருவாய் மலைசைச் சடாக்ஷர னே. (52)

எய்யாப் பிறவிக் கடன்மூழ்கி நாயடி யேனிளைத் தேன்
அய்யா வுனதருள் செய்தினி மற்றன்னை யார்கரு வில்
வையா தெனைப்புரந் தாண்டுகொள் வாய்மயில் வாகன தத்
தையா மொழிவள்ளி பாகா மலைசைச் சடாக்ஷர னே. (53)

மாகந்தங் கொண்ட குழலயன் மாதர் மயக்கி லெந்தன்
மோகந்தங் காம லருள்புரிந் தேபுர மூன்றெ ரித்தோன்
பாகந் தனில்வளர் வாலைமைந் தாநின் பதம்பணி யுற்
சாகந் தனைக்கொடுத் தாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (54)

அனநடை வள்ளிதன் பாகா குகாவென தைய வென்றே
தினமுந் துதித்து நறுமலர் தூவிநின் செம்ப தத்தில்
மனமொடுங் குஞ்சிவ தொண்டருக் கன்னம் வழங்கு மன்பு
தனதென வென்னுளஞ் சேர்ப்பாய் மலைசைச் சடாக்ஷர னே. (55)

வெற்பவிர் வேந்த னருள்சிவ தன்மக வேமெய்ய னே
மற்பட ருஞ்சத்தி வேல்கொண்டு தான வரைவ தைத்துக்
கற்பக நாடு செழித்தோங் கிடநற் கருணை செய்த
தற்பர னேயெனை யாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (56)

பாணிமுன் னன்குடை யோனே யமரார் பயங்க ரந்த
வாணிப னேயுன்ற னாறு றெழுத்தை வழுத்திட வுந்
சேணில மீதுமெய்த் தொண்டர்க்குத் தொண்டுசெய் சிந்தை யுநின்
றுணிழ லுந்தந் தெனையாள் மலைசைச் சடாக்ஷர னே. (57)

எக்காலும் பண்ணவர் தன்குடி யேதழைத் தேற வெண்ணி
அக்கால மாழிகஞ் சுண்டா னருளு மறுமு கவா
முக்காலு முன்பிணை நாயடி யேற்கருள் முத்தி வித்தே
சக்கா பிரண்டுடைத் தேவே மலைசைச் சடாக்ஷர னே. (58)

என்பங்கி னியிருந் தாண்டுகொண் டேயெளி யேன்படு புன்
துன்பங்க ளுங்கொல் வினையாவு நீக்கிச் சுகமிரு நல்
லின்பங்க ளெய்திமந் தெஞ்ஞான்று முய்ய வெழின்மிகு நின்
றன்பங் கயப்பத மீவாய் மலைசைச் சடாக்ஷர னே. (59)

மலந்தங்கு மிச்சட மேசத மென்றெனன் மனம்படு சஞ்
சலந்தனை மாற்றித் தனையுரி வாயுனைச் சார்ந்த வர்க்கு
நலந்தரு வேத முதல்வாபொன் ஞெடனு நாத கிரித்
தலந்தனில் வாழு முருகா மலைசைச் சடாக்ஷர னே. (60)

ஏதோநின் சித்த மறிந்தில னேயிறை யேயெந்தன் மேல்
வாதோ வுனக்கெளி யேன்றுன் மறந்துசெய் வன்கண்மை யின்
கோதோ விருக்கினு நீதவிர்த் தாளெனக் கொண்ட ருளைத்
தாதோகை யேறிய நாதா மலைசைச் சடாக்ஷர னே. (61)

அம்பர்தங் கேய மனுவாவ தின்றி யகற்றி நல
விற்பனர் கேயம் வினைத்திடு வாய்வெற்றி வேலி லங்கு
மற்புய னோதட மாக்கடற் கோதைதனை மார்ப னிந்த
சற்ப சயனன் மருகா மலைசைச் சடாக்ஷர னே. (62)

உவராழி பள்ளிகொண் டோன்மரு காவரு ளேற்றுத வில்
எவரா கிலும்புகழ்ந் தேசுவ ரோவெளி யேற்கி ரங்கு
பவரா ருனையன்றி வேன்முரு காகன பட்புய னே
தவராவ லோடு பணிமா மலைசைச் சடாக்ஷர னே. (63)

மட்டுண்ட சோலை திகழ்மது ராபுரி வந்திகை யிற்
பிட்டுண்ட பித்தன் முதுகாட்டி லாடரன் பேரி லிச்சைப்
பட்டுண்ட நீவி யருள்சுத னேபஞ்ச பாசத்தி லே
தட்டுண்ட வென்னைப் புரப்பாய் மலைசைச் சடாக்ஷர னே. (64)

காலனு கொண்டிய மற்காய்த் தூடன்மிரு கண்ட னருள்
பாலனெனக் காரு மழியா வரந்தந்த பண்பர் குரு
சீலவென் னுள்ளக் கலிதீர்த் தானதருள் செய்ய மறத்
[illegible]று நீக்கிக் கடாதே மலைசைச் சடாக்ஷர னே. (65)

வண்டா னதுகுடி கொண்டிடுந் தண்கொன்றை மாலிகை யுந்
துண்டா மியமதி நீரோடு பன்னகஞ் சூடி யெழில்
கொண்டா னுதற்கண் மணியே யெளியன் குறைதவிர்த் தாள்
தண்டா யுதங்கொண்ட கையா மலைச் சடாக்ஷர னே. (66)

நான்வேறு தெய்வ மறியே னுனையன்றி ஞால மதில்
என்வா னுனக்கென் னுடனருள் வாயெந்தை யேயுட னக்
கான்மாறி யாடிய கற்பக மீன்றிடு கண்மணி நீ
தான்மேற் கதியன்றி யுண்டோ மலைச் சடாக்ஷர னே. (67)

வேதத்த னம்பிகை கண்மணி கூறு மிளிர் நடன
பாதத்த னீன்ற குமாரவென் குற்றம் பலபொ றுத்துக்
கோதற்ற வாழ்வுந் தவஞ்சேர் குணமுங் கொடுத்துப் பிர
சாதந் தனதரு ளீவாய் மலைச் சடாக்ஷர னே. (68)

செஞ்சர ணங்கதி யென்றேயுன் றமர் நினைந்து தித்துங்
கொஞ்சமுந் தன்னருள் செய்யா திருக்கலிற் குப்புக ழோர்
அஞ்சலென் றெண்கலி யாவையு மாற்றி யருள்செய நெஞ்
சஞ்சலை யேல்குக நாதா மலைச் சடாக்ஷர னே. (69)

சிரித்துப் புரமெரித் தோன்வாழ் கிரியனைத் தின்பு யத்தாற்
பரித்தவன் சென்னிபத் துஞ்சிந்தி யோடப் பகழி தொட்ட
வரித்தனு மான்மரு காமயின் மீதினில் வந்தெனை யா
தரித்தனை போலென் றுங் காப்பாய் மலைச் சடாக்ஷர னே. (70)

குருவே யெழிற்குக் குடக்கொடி யாயிக் குவலை யத்திற்
கருவே தனையுற் றிடப்பிற வாதெனைக் காத்தருள் வாய்
மருவேய் குழற்குற மான்மயன் மீறி வனக்கனி யார்
தருவே யெனநின்ற சோலா மலைச் சடாக்ஷர னே. (71)

நாளே கழிந்திடி லென்செய்கு வேனுயர் நாத கிரி
வேளே யுனதரு ளிவ்வேளை செய்து வினைப்பய னுங்
கோளே தடைத்தென் குடிமுழு தாண்டுநின் றோக னகத்
தாளே பணியுந் தாந்தா மலைச் சடாக்ஷர னே. (72)

மைதழைக் குங்கண்டன் மாதேவன் பங்கினில் வாழ்ந்திட வா
சைதழைக் கும்பொன் மரகதத் தையுந் தரு நினது
மெய்தழைக் கும்புக ழியான்பாடி யுய்த்திட வேதமிழ் வித்
தைதழைக் கும்படி செய்வாய் மலைச் சடாக்ஷர னே. (73)

மணக்கின்ற தூத வனமே வியதிரி மன்ன வர்கள்
பிணக்கன் றறுத்தருள் பெம்மான் மகிழும் பிராட்டி பெற்ற
குணக்குன்ற மேபொருட் கேட்க வான்செவி கூரிய மக்
தணக்குன்ற மேதமை செய்தான் மலைசைச் சடாக்ஷர னே. (74)

மேகஞ் செறிந்திடு சூதம் பனச மிகுந்த தெங்கு
பூகஞ் செறியும் பொழிலு தகிரிப் புனித குகா
வாகஞ் சமனைய நின்பத நாளும் வழுத்த வார்
தாகஞ் சனித்தனை யிட்டோய் மலைசைச் சடாக்ஷர னே. (75)

ஓவிய காரற் கமையா வுருவத்தை யொத்த வள்ளி
மேவிய மொய்ம்பிரான் டாறுடை மெய்ய விரைந்து வந்து
தீவினை தீர்த்தருள் செய்யா விடிவிற் கிலைத்தனில் வே
தாவிதி யாமற் றவர்க்கே மலைசைச் சடாக்ஷர னே. (76)

கேமிகத் தத்தத் திலங்கிடு வோன்பின்னை நீவி சிவ
காமிபித் தன்பங்கில் வாழ்பரை யீன்ற கடம்ப வுன்றன்
மாமிகு மாண்மிய மேத்திப் பணியுகல் வாழ்வருள் வேற்
சாமியத் தம்பிரான் டாருய் மலைசைச் சடாக்ஷர னே. (77)

எங்கு நிறைந்தவ னீயென் றுவல மியற்றி முன்னுன்
மங்கைபங் கன்கைக் கனிதனை முன்வந்து வாங்கி யுண்ட
அங்குச பாச னடியார் பவமறுத் தாண்டிடு மா
தங்க முகற்கிளை யோயான் மலைசைச் சடாக்ஷர னே. (78)

மேரு விலங்கைத் துரைரா வணன்குடி வேர றுத்த
கோதுனை ராகவன் றன்மரு காகுக் குடக்கொடி யாய்
நாரு னிலத்தி லுனைத்துதி யாவஞ்ச ஞமிலு நீ
தாரு வதுதமை செய்தான் மலைசைச் சடாக்ஷர னே. (79)

மையது தீட்டும் விழிமட வார்மயன் மாற்றி யுன்பூ
சையது நாளும் புரிந்தேகின் றுணிழல் சார்ந்தி டக்கிரு
பையது செய்து புரந்திடு வாய்தனம் பந்து இன்னத்
தையது விருவர் சமர்த்தா மலைசைச் சடாக்ஷர னே. (80)

குலவருக் கஞ்சிறி தில்லாத கொள்கையைக் கொண்ட பொன்னம்
பலவருக் குப்பிறந் தோனேயென் றோர்தரம் பாடிடி னின்
னலவருக் கிம்மியுஞ் சாரா தருள்பவ நம்பி சிற்றூர்த்
தலைவருக் கும்புகழ் மருகா மலைசைச் சடாக்ஷர னே. (81)

சீர்தங்கு மார முலையின் மின்னார்மயற் றீத கற்றி
யோர்தங்கு செந்தமிழ் சன்மார்க்க நற்றவ மீந்தருள் வாய்
கார்தங்கு விண்டொடு நாதகி ரிச்சூழ காக டப்பந்
தார்தங்கு திண்சிலை வாகா மலைசைச் சடாக்ஷர னே. (82)

மண்ணவ் வளைவயு மோரடிக் காக்கிய மாய னெனுங்
கண்ணன் றனையண்ண னென்றேறு மங்கையற் கண்ணி னமைந்த
பண்ணன்ப னேனெனை நின்னருட் கண்கொண்டு பார்த்திடு வாய்
தண்ணம் பொழில்வளஞ் சூழ்மா மலைசைச் சடாக்ஷர னே. (83)

ஒப்போ தரிய திருமுரு காவென் றுவந் துனையே
முப்போதுந் தொண்டர் துதிப்பதை யேனுமிம் மூடனுங் கண்
டெப்போது மேத்தி யிடர்நீங்கி யுய்தற் கிசைந்து நின்பா
தப்போதிப் போதருள் வாயே மலைசைச் சடாக்ஷர னே. (84)

நாலா விதச்சித் தியற்றிடு மாடவி னம்பிலு மென்
மேலா பரனென வெண்ணிய சாமனை வெள்கிட வோர்
காலாடி தன்மக னேயெளி யேனைக் கருத்துன் மறந்
தாலா தரவெவர் காப்பாய் மலைசைச் சடாக்ஷர னே. (85)

மின்னைச் சரிசொ லயிலிடை யாயுயர் மெய்த்தெய்வ மென்
றுன்னைத் துதிக்கு மெளியேற் கருளை யுதவிலை யேல்
என்னைப் பழித்திலர் வேடமின் றுட்கிறை யேகுக நின்
தன்னைப் பழிப்பர்கள் ஆண்டாய் மலைசைச் சடாக்ஷர னே. (86)

அமரா பதிக்கர சிந்தோ யயன்முன் னமைத்த வழி
இமராசன் வந்தெனைச் சூழ்ந்தாலு மந்த விடமொழித் தக்
குமராவந் தேவிலனை முன்வந்து நின்றுநின் கொத்தடி மைத்
தமரா மெனவருள் செய்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (87)

எள்ளா டியமெச்க் கிடைப்படல் போலவிவ் வேழை மனங்
கொள்ளாத வல்லலைக் கொண்டுழ லாதற் குணங்கொ டுத்துக்
கள்ளா டியகடுக் கைக்கண்ணி யானருள் கண்மணி யே
தள்ளா தெனைப்புரந் தாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (88)

வானே முறிது மதலைதன் றுயின் மடியி னரு
கேனோர்த் திடச்செல்லு மன்புறு போலெனக் கேயி னிய
பானே யிருந்து நினைமுட்டி நல்லருள் பாலித்த தாய்
தானேயென் றுன்னை யடைந்தேன் மலைசைச் சடாக்ஷர னே. (89)

நின்று நாவன்றி மற்றறி யேனிந்த வீணில மும்
பொன்றுடு மேத்தும் புனிதா வெனையும் புரந் தருள
நன்றுளிந் நாளித் தகியா கிலுங்கதி நண்ணிட வுன்
தன்று ளெனவருள் செய்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (90)

தலையான நித்திலைத் தார்த்தனத் தார்பிகை தங்கிடு கா
தலையா னகற்றிநின் றுணைநிழல் சார்ந்தாய் தாங்கரந்து தேர்
தலையா னதுசொலிக் காக்கவின் னேதகி தாதகி சேர்
தலையா னருள்குரு நாதா மலைசைச் சடாக்ஷர னே. (91)

தமையந்தி ஆதனஞ் சேர்பொற் பதுமத் தடச்சங்க வா
தமையந் திரியப் புரிவணி காவெந் தளத்த சுரர்
தமையந் திறலயி லாற்செற்ற வாகின் சரண மென்சித்
தமையந் திகழ வருள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (92)

சக்கர மஞ்சல் கணிபாணி பின்னாயின் றன்சுத யஞ்
சக்கரத் தோன்பி னுதித்தோய் சொதர் புதல்வியைக் கொஞ்
சக்கர விற்சென்ற வாவெனக் குன்னரு டந்திடு முச்
சக்கர ஆக்கினை யோனே மலைசைச் சடாக்ஷர னே. (93)

தனதாவென் றுடிய சங்கர னூர்தன் றனய குகா
தனதா னியமிகு செல்வமுன் கல்வியுந் தந்தெ னக்குத்
தனதாக நீயிருந் தெக்காளு மிக்க தணிபுரி வே
தனதா னவந்தொலைத் தோனே மலைசைச் சடாக்ஷர னே. (94)

சடையார் தலையிறைக் குங்குரு வேவின் டலத்தவர் வே
சடையா னதுதவிர்த் தாண்டருள் காவென் றமிழ்த்தொழின் மா
சடையா தெநாளுந் தழைத்திட நல்லரு டந்திதை யஞ்
சடையாம லன்புளவத் தாள்வாய் மலைசைச் சடாக்ஷர னே. (95)

தனக்கந்த மின்றென் றெதிர்த்துரை வென்று தனித்த சிம்மா
தனக்கந்த ரப்பரி யார்க்காத்த தண்ணரு டந்த துவ
தனக்கந்த னேயுயர் சன்மார்க்க சற்றவர் தந்தருள் சக்
தனக்கந்த மோங்கும் பொழில்சூழ் மலைசைச் சடாக்ஷர னே. (96)

தனையா டவர்கொளச் சாலஞ்செய் வார்மய றங்கி யென்சித்
தனையா தருள்புரிந் தன்புட னேதமி யேன்குறை யெத்
தனையா யினுந்தவிர்த் தெந்நாளு நற்சுகந் தந்தெனை யது
தனையர்வஞ் சேசெனை வந்தாள் மலைசைச் சடாக்ஷர னே. (97)

தாவா கனசுக முந்தமி ழுங்கதிர் தங்க யிற்குந்
தாவாக னல்விதி யைக்குட் டியகைய தாழுன்பர்க் கா
தாவாக னன்னடத் தோகையில் வந்தரு டற்பா கத்
தாவாக னன்றன் மருகா மலைசைச் சடாக்ஷர னே. (98)

தனதனந் தானனில் லன்று ரெனிலுங்கை தாமரை வே
தனதனந் தானடை யென்றேயுன் ஞமனின் றண்ணருள் செய்
தனதனந் தான வெனமன்று ளாடிமைந் தாவடி யார்
தன்தனந் தானன் மருகா மலைசைச் சடாக்ஷர னே. (99)

தாங்கந் தரங்கன வல்லா மிதையத் தமியன் வெரு
தாங்கந் தரங்கர் மருகாவென் றுந்தயை தந்திலை யத்
தாங்கந் தரங்கம தாய்க்கேட் டதையெற்குச் சாற்று சனைத்
தாங்கந் தரங்கவின் செய்மா மலைசைச் சடாக்ஷர னே. (100)

எங்கை மரகத மாதேவன் வாழி நளின முகைக்
கொங்கைமின் னார்வள்ளி குஞ்சரி வாழிபொற் கோழி சிகி
செங்கை யயிற்படை வாழியெந் நாளுமெய்ச் செல்வ மலி
மங்கள மோங்கு மலைசைச் சடாக்ஷரன் வாழிய தே. (101)

(மலைசைச் சடாக்ஷரன் மாலை முற்றுப்பெற்றது.)

# 8. திருச்செந்தில் வெண்பா வந்தாதி.

## விநாயகர் காப்பு.

### வெண்பா.

பொன்னுலவு செந்திற் புனிதன்மிசை வெண்பாவான்
மின்னுலவு மந்தாதி விள்ளவே—என்னைமிக
ஆண்டுகையா தாதரிக்கு மையன் கரிவதனத்
தாண்டுகையான் றாளே துணை.

### நூல். வெண்பா.

மெய்யான தெய்வமிந்த மேதினியி னீயேயென்
னையாமுந் நால்கண்முத லாரணமு—மெய்யாது
போற்றுசெந்திற் றேவுன் புகழ்பாடச் செந்தமிழ்நாத்
தேற்றுனரு ளோங்குதல்செய் தே. (1)

ஓங்கு திருச்செந்தி லுத்தமா வுன்புகழைப்
பாங்குடனன் போடுதுதி பண்ணுமெனக்—காங்கருணை
செய்யா திருக்குஞ் செயலறியேன் றெவ்வடுவேற்
கையா விதுதகுதியிற் கா. (2)

காவென் றுனையடைந்தேன் காக்கவென்று லாகாது
போவென்றாற் செந்திலையா போவேனே—பாவென்றும்
நின்மீது சாற்றுமன்பர் நேயாநின் னெஞ்சுவந்தாள்
என்மீது நல்லருள்செய் தே. (3)

செய்த பிழையுமினிச் செய்பிழையு நீக்கியெனை
உய்யுநெறிக் காக்கிவைப்பா யுத்தமா—கொய்யுமலர்
கொண்டடியார் வேண்டவெனிற் குக்குடத்தோ டாழிதிரை
மண்டுசெந்தில் வீற்றிருப்ப வா. (4)

பவார் கலிதன்னைப் பற்றறுக்கு மெய்ப்பொருளென்
றவாநிறைவோ டேதுதிக்கு மன்பர்—தவாவிடும்பை
தீர்த்தருளுஞ் செந்திநகர்த் தெய்வ சிகாமணியே
பார்த்தருளென் மீதினிலன் பாய். (5)

அன்பான வள்ளிதெய்வ யானை யிருபுறமு
மின்போ விலங்கநிற்கும் வித்தகா—இன்பதாமத்
தானைத் துணையாகத் தான்றுதிசெய் தேனிக்க
வேனைக் கருள்செய்ய வே. (6)

வேயுதித்த மூக்கண் விமலர் திருமுகத்தன்
பாயுதித்த தேவ பதாயுதப்புள்—ளாய
கொடியுடைய செந்தினகர்க் கோவே யெனையுன்
மடியிலடி யார்களுடன் வை. (7)

வையமுதன் மூவுலகும் வாழ வமணமதப்
பொய்யிருளோட் டிச்சைவம் புங்கமுறத்—துய்யபுகழ்ச்
சம்பந்த ராகிவந்த சாமி தயைபுரிவா
யெம்பந்த நீக்கியுய்ய விங்கு. (8)

உய்ய வுனதுதுதி யோதிடவு முற்றபணி
செய்யவன்புந் தேக்கிமிகச் சீரருள்வாய்—மெய்யடியர்
புன்பிணியோ டெவ்வினையும் போக்கிவரு சென்மமெனும்
வன்பிணியை நீக்கவல்ல வா. (9)

வல்லவா தேவா மணியே மணிவிளக்கே
சொல்லரிய வேதத் துதிப்பொருளே—நல்லெவரும்
போற்றுசெந்தின் மேவிவளர் புண்ணியா வென்குறையை
ஆற்றுதலுன் பாரமதை யா. (10)

ஐயமற்றின் புற்றிடவே யண்டர்க் கருள்புரிந்து
வெய்ய குணத்தசுரர் வேரறுத்த—துய்யவடி
வேற்கையா செந்தினகர் வித்தகா வென்னையுமன்
பாற்கருணைக் கண்கொண்டு பார். (11)

பார்த்தெளியே னுய்யப் பழவினைக ளத்தனையுந்
தீர்த்துமிக நற்கருணை செய்குவாய்—மூர்த்திகட்கும்
முன்னவா வேத முதலவா செந்தினகர்
மன்னவா கூர்வேல வா. (12)

வேலாநின் பாதமலர் வேண்டுமென்பர் மெய்ப்பிணிக்கும்
மேலாய் வரும்பிறவி வெம்பிணிக்கும்—வேலை
அலையாருஞ் செந்தினகை யையாவுன் பன்னீர்
இலைநீறு நல்லமருந் தே. (13)

மருந்தை யிகழ்பொன்று வாரிகடைந் தண்டர்
அருந்த விருந்தளித்த வண்ணல்—பொருந்துமரு
கக்கோனே செந்திற் கரும்பே கழற்கன்பிற்
றக்கோனுக் கிக்கருணை தா. (14)

தானாக நின்ற தனியே தனிச்சுடரே
தேனாக வன்பருள்ளத் தித்திப்பே—வானாடு
போகிக் கெனவளித்த புண்ணியா வென்னருட்டா
யாகித் தடுத்தாட்கொண் டாள். (15)

ஆளுமன்பர் நெஞ்சி னறிவே யறிவினிலெங்
காளு மொளிதிகழு நற்சுடரே—நீளும்
விலைமதிப்பில் லாதவுயர் மெய்மணியே வந்தாள்
அலைகுதிக்குஞ் செந்தினிலை யா. (16)

ஐந்து புலனை யடக்கி யனவரதஞ்
சிந்திப்போர் நெஞ்சினுறுஞ் செல்வமே—வந்திக்கு
வேலையா ளாகிவந்த மெய்ப்பொருட்கு மெய்ப்பொருளே
வேலையா வாகாக்க வே. (17)

காக்குங் கருணைக் கடலே கடல்துயில்வோர்க்
காக்குமிரு கண்மருகா வண்ணலே—நீக்கரிய
மாயக் கடல்கடத்தும் வள்ளலே வந்தாட்கொள்
வாயக்க மாறிரண்ட வா. (18)

வார்கழனின் றாட்கன்பு வையாரேன் மாசகன்ற
ஏர்பெறுநன் முத்திவழிக் கெய்துவரோ—நேர்செந்தில்
நண்ணும் வடிவேலா நான்முகனும் வாசவனும்
எண்ணுறுநற் பண்ணவரு மே. (19)

வரும்பத்தி யாசார மன்னும்புகழ் வாழ்வு
பெரும்புத் திரச்செல்வப் பேறுஞ்—சுரும்புலவி
நின்றுபண்பா டும்பொழில்சூழ் நீடுசெந்தில் வேல்முருகா
வென்றுதுதி செய்யன்பர்க் கே. (20)

துதிக்கைக் கிரங்கியன்பு தூக்கி யருள்செய்
துதிக்கைக் கயம்பின்வரு சோதியே—விதிக்கையனை
வன்சிறைக்குள் ளாக்கும் வரதாவா வண்ணமிகு
மென்சிறையின் மஞ்ஞைமிசை மேவி. (21)

மேவலர்க ளன்றோரே வெப்பமினி சாராதே
மாவலகூற் றெக்காளும் வந்தணுகான்—பூவலர்தன்
டேடுறு வாரிபுகுஞ் செந்திலையா நந்தமெனை
வேலோடு மன்பர்பக்க மே. (22)

பக்கமென் குக்தாளம் பாங்கார் மணிக்குவியல்
மிக்கவலை வீசுசெந்தில் வித்தகா—தக்க
அன்பர்பணிக் கென்னை யாளாக்கி யாரணநின்
றன்பதச்சே வைமகிழ்ந்து தா. (23)

தாருகனை வென்றவுயர் தற்பார சாதுசங்கச்
சீருலவு செந்திநகர்த் தெய்வமே—கார்குழலார்
எண்ணத்தி னுனைத் திறந்து பிறந்துழலப்
பண்ணப்ப டாதென்னையப் பா. (24)

அப்பார் சடில னருமைத் திருமகவே
துப்பாருஞ் செந்திநகர்த் தூய்மணியே—யெப்போதும்
உன்மீது நெஞ்சுருக்க முற்றவெந்த னுண்மைகண்டும்
என்மீதி ரக்காத தென். (25)

என்னுடல மாவி யீரணியமோ டுள்ளதெல்லாம்
நின்னுடைய தாக்கியென்றும் நேயம்வைத்தான்—மன்னுசெந்தின்
மூர்த்தியே யேழைநதி மூக்காலு மேற்றருளுங்
கார்த்திகே யாசண்மு கா. (26)

சண்முகா நின்வடிவின் றன்மையறி யாதுமறை
விண்முகங்கொண் டின்னுமுமென் மேலேத்து—கண்ணுமலர்த்
தேனிறங்கு சோலைவளச் செந்திலையா வென்றுநினம்
யாணிரங்கல் கண்டிரங்கை யா. (27)

இரங்கா திருக்கி னெனையார் புரப்பரெந்தாய்
தாங்கா சனன்பதுமத் தானுங்—காங்கடலை
மேற்கொண்டு நின்றுதொழும் வித்தகர்பா லாவெனையாள்
வேற்கொண்ட செந்தினிற்கே றவே. (28)

தேவே திருச்செந்திற் சின்மயா சிட்டருக்காங்
கோவே நிசரர் குலகாலா—பூவேயுங்
காவடிகொண் டாடு மெனைக் காப்போய் கருணையுடன்
மாவடிவே லேந்தியென்முன் வா. (29)

வாமுருகா வென்றுன் மலரடியை நாணாளுங்
காமுறுமுள் ளத்தன்பர் காவலவா—காமுழுதும்
பூணைக்கி பாடுசெந்திற் பூமா புரந்திடெளி
யேனைக் கிருபைபுரிந் தே. (30)

தேசாரு மாறெழுத்தைச் செப்பியே வெண்ணீறு
பூசாதார் நெஞ்சிற் புகாதானைக்—காசாருஞ்
செந்திற்பு குந்தானைத் தேவதே வென்றுநெஞ்சே
சிந்திக்கு நற்றொழிலைச் செய். (31)

செய்விப்பான் செய்பவனீ செய்பிழைநீக் கென்றிரந்தால்
உய்விக்குந் தன்கருணை யுற்றவனீ—நையுமெனைச்
சோதிக்க வென்று துணிந்தாயேற் செந்திலையா
நீதிக்க டாதுரைத்தே னோர். (32)

உரைத்ததுதி யத்தனையு முற்றுணரா தாற்றிற்
கரைத்தபுளி யாக்கல் கடனோ—துரைத்தனத்தாள்
பிள்ளைக் கழகிதுவோ பேணுவாய் செந்திலுயர்
வெள்ளைக்க டம்பணிகோ வே. (33)

வேணயன மாதர்மயன் மிக்குடையே னைப்பணித்துய்
வானயரே லென்றுரைத்து மாறில்லா—ஞானநெறி
சேரும் படிக்கென்னைச் செய்தாற் புகழுனக்கே
நேருஞ்செந் தூர்முருக னே. (34)

முருகார் கடம்பணியு மொய்ம்பா வருள்வாய்ந்
தொருகாற் கடைக்கண்ணு லுற்று—மருளாமல்
என்னைத் துயர்க்கடல்விட் டேற்றினாற் செந்தூரா
வுன்னைக்கோ விப்பவருண் டோ. (35)

உண்டென்போர் தங்கட் குதவவுனைப் போற்றெய்வம்
எண்டிசையி லுங்கண்ட தில்லையே—யண்டிநான்
உன்னிடத்து மன்றாடி யோதியுஞ்செந் திற்றுரையே
யென்னிடத்துங் கன்னெஞ்ச மேன். (36)

ஏனென்று கேளா திருப்பாயே லிவ்வுலகில்
நானென்றேற் றப்புரப்பர் நான்காணேன்—மானென்றுன்
னையனரு ளுங்கடம்ப கந்தாகு காசெந்திற்
அய்யனே யென்றுதுதித் தும். (37)

அம்பிபா டெக்குழலார் சோபவலைக் குள்ளாகி
வம்பிலே நாயேன் மருண்டாலும்—எம்பிரான்
சென்னியா றற்றசெந்திற் சேவகன்றன் னாறெழுத்தை
உன்னியுய்வேன் ஓமெழுத்தோ டும்பர். (38)

உம்பரைக்காக் கக்கடுவை யுண்டா னருள்செந்தி
லெம்பரா கண்ணிணையி னேர்மணியே—வம்பரு
எண்ணையாற் றிக்கதியி னீட்டற நற்கருணை
பண்ணல் கடனுனக்கப் பா. (39)

அப்பி லெழுமொக்கு ளனையவில்வாழ் வைப்பெரிதாய்
ஒப்பிமகி ழுங்குணத்தை யோட்டிக்—கப்பிலா
மாமனக்கண் கொண்டுன் வடிவறியச் செந்திலையா
தாமதமின் றிக்கருணை தா. (40)

தாயுநீ தந்தையுநீ சற்குருநீ சர்வகலை
ஆயு மறிவளிக்கு மாண்டவநீ—யேயுமல
கெல்லாநீ யாயிருந்து மெற்கருளச் செந்திலையா
வல்லார்வே ரூர்வேல வா. (41)

வாக்கு மனமுமொன்றாய் மன்னி மௌனநிலை
தேக்கி யுனையறியச் செய்குவாய்—போக்குவர
வற்றவா தேவா வறுமுகவா செந்திநகர்
உற்றவா வென்றுன்னை யுள்ளி. (42)

உள்ளத்தி னீங்காதே யூறுஞ் சிவானந்த
வெள்ளத்தை நாளும் விளக்குவாய்—பள்ளத்தின்
பக்கமுறுஞ் செந்திற் பதியிற் பதிவாக
மிக்கவனாய் நின்றகுரு வே. (43)

குருவே யுனைநிதமுங் கும்பிட்டு வாழ்த்தக்
கருவே தனையகலக் காணத்—திருவேயுங்
கைவாய்கண் ணாக்கிக் கதிசேர நற்கருணை
செய்வாய்செந் தூர்வளர்முத் தே. (44)

முத்தேமுத் தேவர் முதல்வாமு வாதமுத்தி
வித்தே பழவினைக்கு மெய்மருந்தே—பித்தேனை
ஆண்டுகொள்வா ருன்னையன்றி யாரறியேன் செந்தினில்வேல்
பூண்டதுரை யேயாளிப் போர்து. (45)

இப்போதாம் காணையா பின்னமொரு நாளாமென்
றெப்போதும் காட்சுழிந்தா லென்செய்வேன்—அப்பாவுன்
சித்தமிரங் கிக்கருணை செய்விரைவி லேழைபங்கிற்
கத்தனே செந்திற்கு கா. (46)

குகாசரவ ணாறுவசங் குக்குடத்தா னேசண்
முகாவென் றெனாளுநெஞ்சே மூன்று—பகாமல்
அஞ்சலென் றுன் னூன்வந் தருள்புரிவான் செந்திலெந்தை
துஞ்சற் பிறப்பைத் துணித்து. (47)

துறக்கத்தின் செல்வத்தைத் தின்னமார் வேந்தன்
திறக்கக் கொடுத்தருளுஞ் செந்திற்—றுரைக்குகனை
ஓதுவாய் நெஞ்சேயீ துண்மையுனக் கெந்நாளும்
ஏதுங் குறைவில்லை யே. (48)

இல்லை யெனவிரப்போர்க் கீயுமிதை யங்கொடுத்தான்
கல்லைவில்லா கக்கொண்டான் கண்மணியே—நல்லவர்கள்
சூழும் பொழிலுடைய தூயசெந்தில் வேல்பிடித்து
வாழுஞ் சரவணப வா. (49)

சரவணன்வே லேந்துகரன் றன்னடியார் தங்கள்
சிரவணத்திற் கின்னூல்கள் செப்புங்—குரவனும்
பள்ளக்க டற்கரையின் பாங்குவளர் செந்திலனென்
உள்ளத்தெந் நாளுமுறை வோன். (50)

உறையறிவோ ரெந்நாளு மோதுமுய ராறெழுத்தோன்
மறையறியா வண்ண வடிவேலன்—நிறைமணிசேர்
பொன்முடியான் செந்திற் புனிதன்ச ரண்புகுந்தோர்க்
கென்முடியா தேதுமில்லை யே. (51)

ஏதுமறி யாதசிறி யேற்குனது சீர்புகழ்
ஓதுமறி வைக்கொடுத்தா ளுத்தமா—சீதை
பதியார் மருகா பரமர் குமரா
கதிமேவு செந்திற்கடம் பா. (52)

கடம்பணிந்த திண்புயவேற் கந்தாநின் றூனி
விடம்பணிந்தோர்க் கெவ்வாழு மீவாய்—மடம்புனையுஞ்
சித்தத் தெளியேற்குஞ் சீருனை செய்தனது
பத்தத்திற் கிற்கவும்மைப் பாய். (53)

பாயுந் திரையாழிப் பள்ளியா னும்பதுமத்
தேயு மயனோ டிருவர்தமக்—காயவரி
தாகிநின்ற சோதி யருள்செந்தில் வேல்பிடித்த
யோகி யெனையாடு யோன். (54)

தூயபொரு ளேசெந்திற் றன்னுபொரு ளேயுனது
சேயருணம் பூரித்த நீள்பொருளே—நாயடியேன்
பொய்ப்பொருளி லாசை புகாவண்ணங் காத்தரிய
மெய்ப்பொருடந் தாடினமு மே. (55)

தந்தா வளவதனத் தம்பிரான் றன்னையழைத்
தந்தா வளஞ்சே ரடவிதனிற்—பந்தாம்
முலையாள் குறத்தியின்ப முற்றுமயின் றோய்செந்
திலையா யெனக்கருளே செய். (56)

அருள்செய்யச் செந்தினில்வே லப்பன் வருவானென்
றொருகுறிகா ரன்சொலினு மொப்பிக்—குருவாமென்
றென்சென்னி மீதவன்றா ளேத்தி யவன்பணியே
நன்கென்று செய்துய்வே னான். (57)

நானே யுனதடிமை யாமென்றிஞ் ஞாலமெலாந்
தானே யறிந்ததனைத் தானறிந்துங்—கோனேநீ
சும்மா யிருந்துசெயுஞ் சோதனைக்கா ளோவெளியேன்
அம்மாசெந் திற்றுரையே யாள். (58)

ஆட்கொண்டாற் பொய்மை யழுக்கா றவாகதப்பன்
றாட்கொண் டிடுபவமு மைந்து—தாட்கொண்டு
போமே யுனதரிய பொற்பதத்திற் சிந்தையென்றும்
ஆமேசெந் தூர்முருகை யா. (59)

ஐயந் திரிந்துன் னருள்பெறுசங் கப்புலவோர்
உய்யவே யாலவா யூரிலே—மெய்வணிகர்
மாகுலத்தின் மூகைமக வானசெந்தி லாவென்றன்
ஆகுலந்தீர்த் தாளுவதென் றும். (60)

என்று மெனவுன் னருளடி யேயிருத்தல்
குன்று வகைநீ கொடுத்தாளின்—அன்றேடென்
அஞ்ஞானம் வேறற் றகன்றுசெந்தி லாயரிய
மெஞ்ஞான மேற்கொள்ளு மே. (61)

தொன்னுவேத பன்னிக் கொடுக்குங் குணமறியா
என்னறவித் தாற்செந்தி லெந்தாய்வேல்—வள்ளால்
மறைமனுகா னூழ்வினைபோ மன்னுடைக ழோங்கும்
அறுமுதலா நான்குமெய்து மாம். (62)

ஆமோசெர் னூா னருளென்றே யையமுற்று
நீமோசம் போகாதே நெஞ்சமே—மாமாலால்
அண்டியா னேத்து இத்த வாறுபத்து மூவர்களோர்
தொண்டர்சரி தங்களறிந் தாம். (63)

அறிந்தவர்க்கே யன்ப வசாரா லந்நான்
முறிந்தவம ரர்ப்புரந்த மொய்ம்பன்—செறிந்தசடை
ஆண்டவன்சேய் செந்தி லவனே யெளியேற்கு
வேண்டும் வரங்கொடுக்கும் வேள். (64)

வேளை கருணை விமலா வருள்செயவிக்
காளைகன் ருனென்று நத்துவாய்—கோளேறு
பாழ்மனமே வேறு பயம்வேண்டாஞ் செந்திலான்
சூழ்வினைது ளாக்குவனர் தோ. (65)

ஆக்கிடுவென் றன்னையடைக் தாரை யருட்கண்ணால்
நோக்கிடுவ னெவ்விதமன் னூலறிவுத்—தேக்கி
விரிபூ தலமெங்கு மெச்சிடச்செக் தான்
அரியதமிழ்ப் பாவலவ ரால். (66)

ஆயன் திருமருக னாறுமுகன் சேவலன்மெய்
நேயர்மனத் தேயுறைவோ னீதமலி—தாயசெந்தில்
இட்டமுடன் மேவிவள ரெங்கோனென் றேதுதிப்போர்க்
கட்டசித்தி யும்மெளிதி லாம். (67)

ஆம்போதா மென்றிருந்தா லாசை மனக்குரங்கு
நேம்பாத் திமலிவாற் சென்றனன்று—ஆம்பிலமுண்
பித்தனே போலப் பிதற்றிலென்செய் கேன்செந்தில்
அத்தனே யுன்பே ரருள். (68)

அருளென்று வாதாடற் காறினுஞ்செய் தன்பார்
குருவென வந்தாண்டமை கொள்வாய்—தருமிகவே
யுந்தி மதாகதியா போழிக்க டல்புகுதற்
செந்திலவா செப்பருமுத் தே. (69)

செப்பைநிக ராகிலத் தெய்வமயில் வள்ளிமயில்
ஒப்பரிய புள்ளி யொளிருமயில்—அற்புதமாம்
மும்மயிலும் வைத்தாளு மூர்த்தியே செந்தூரா
யிம்மையிலும் வந்தெனையா ளே. (70)

ஆளென்று நக்கீ ரன்றருட்பா வாலேத்தக்
கோளொன்று வெற்பிடியக் கொல்பூத—மாளவயில்
வேலாற்சி தைத்துமவர் மேவுசிறை தீர்த்தாண்ட
பாலாசெந் தூர்முருகப் பா. (71)

பாயுமத மாவினொடு பல்புனத்தே ளுங்கிழங்கும்
மேயுமான் கன்றடவி மேதிகளு—நேயமொடு
சீதனமா கக்கொணர்ந்த செல்வியைச்சேர் செந்திலெந்தாய்
நீதனதாய் வந்தருளின் னே. (72)

இன்னம்ப ராமுகமே னெற்கருள்வாய் செந்திநகர்
மன்னவா தொந்தி வயிற்றோடே—மன்னுசந்தி
மந்தையிலுந் தெட்பொறியும் வாங்கியவ லோடருந்தும்
எந்தைபின்பு வந்ததெய்வ மே. (73)

தெய்வத்தா லாகா தெனினுந் திருமுயர்ச்சி
மெய்வருத்தக் கூலி மிகத்தருமென்—றுய்யச்சொல்
வள்ளுவர் நூலின் வழிமுயன்றேன் செந்திலுயர்
வள்ள லருள்புரிகு வாய். (74)

புரிகரிமு கக்கிளையோய் பூவினுதி யாமந்
பரிகரிநீ யன்னைகருப் பையை—விரிபொழில்கள்
மெத்தவுந்து செந்திநகர் வேண்முனவா விக்கினங்கா
அத்தாவென் போர்க்கின் னருள். (75)

அருளொன்று காடி னழுக்கா றவாவெகுளி
மருள்காமம் நித்திரையும் வாதை—புரிபசியும்
ஒன்றுவிட் டொன்றெய்தி யுபத்திரிக்கு தேகாப்பாய்
யென்றுமே செந்திலிறை யே. (76)

இறையைங் கணைக்கிழவ னென்மீ தலர்கொண்
டுறையாதெந் நாளு மகற்றி—மறைகுடுஞ்
செஞ்சரண மார்சிலம்பின் சிரொலியோ டென்முனம்வந்
தஞ்சலென்றாள் செந்திநிலை யா. (77)

ஐயா றிரண்டறமு மன்பினிரு நாழிநெற்கொண்
டெய்யா தியற்று மிமையமகள்—மெய்யான
சேயே திருச்செந்திற் றேவர்சே னாதிபநற்
றூயே யெனவருணீ தா. (78)

நீதா ரகமின்றி நீணிலத்தி லுற்றதுணை
யாதா மொருவ ரறியேனே—நாதாவெற்
கின்றோ மருநாளோ வெத்தினமோ செந்திலையா
நன்றா மருள்புரியு நாள். (79)

நாணாளு முன்னையே நத்தினேற் கன்புவைத்துப்
பேணா திருத்தல் பெருமையோ—சேணாடர்
பற்றுதுயர் தீர்த்தருளே பாவித்த செந்திநக
ருற்றதுரை யாகவிருந் தும். (80)

இருந்தா தலாருச்சித் தேசெந்தூ ரன்றாள்
பொருந்தாத பேய்மனமே பொல்லாக்—கருந்தாதை
ஒத்த நமன்வலைகொண் டெற்றிடுமுன் னாறெழுத்தைச்
சித்தமுட னேதினமுஞ் செப்பு. (81)

இனம்பலவா யெண்ணிச் செகவாழ்வை யோர்சொற்
பணமெனவெண் ணாதுழலும் பாழாம்—மனமே
யெவ்விதமுஞ் செந்திலெந்தா யெந்தாயென் றேத்துனது
வெவ்வினைதான் பட்டோடு மே. (82)

ஓடிச் சுணங்கனென வட்டாரா தேயுழன்று
வாடி மெலியு மடநெஞ்சே—தேடி
விளியா திலுஞ்செந்தி லீசனடித் தொண்டிற்
கனிவாய்க்கில் லின்புவருங் காண். (83)

காணுஞ் சுதர்முதலாங் கைப்பொருளை மாடுமனை
பேணுமனை யாளுற்றோர் பெற்றோருஞ்—சேணியமன்
டுற்று வரும்போ துதவுவரோ நெஞ்சமே
பற்றுசெந்தில் வேள்பதமன் பாய். (84)

ஆயுங் கருணையைநீ யன்புற் றருளாயேல்
வேயு முனைவலுவி லேபிடிப்பேன்—றாய்முலையிற்
பான்மா றினுமதலை பல்லிடல்போற் செந்திலநத்
தான்மா லயன்றொழுநா தா. (85)

அயலார்போ லின்னு மடிமையைச்சோ தித்தல்
செயிலாருங் கண்டு சிரியாரோ—மயலாரும்
என்றாழ்வு நீக்கிவுய்ய வெண்ணியே செந்தூரா
வுன்றாளி னைக்காட்கொண் டும். (86)

கொண்டான பின்னே குலம்பழிப்பார் மேதினியி
லுண்டா திருச்செந்தி லுத்தமா—தொண்டான
என்பாற் பிழைநா டிருப்பினுநீ யேபொறுத்துன்
அன்பாற் கருணைபுரிந் தாள். (87)

ஆண்டிடினு மானதி ருந்தாலு மன்பினுனை
வேண்டுங் கடமைசெந்தில் வித்தகா—பூண்டமனத்
தன்கணவ னீக்கிடினுந் தானீங்காக் கற்புடைய
பொன்னனைய மின்னனையார் போல். (88)

அனைபோ லுள் ளன்பா லமுதூட்டி நன்கு
தனைபாவுந் தந்தருள்மெய்த் தாதா—கனைபகடேர்
காலன் றனையுதைத்த காலனரு ளுஞ்செந்தில்
வேலனெனக் கெந்நாளு மே. (89)

மேனாளிற் செய்தீ வினைதவித்திவ் வேழையைநீ
தானுண் டருளுவந்து தாராயேற்—றேனாரும்
பூவிரிசோ லைச்செந்திற் பூமாபு ரந்திடவே
தாவிதியா மற்றவர்க்குத் தான். (90)

தானந் தவமுழுதுஞ் சார்ந்து தனையறியு
மோனந் தனையருள்வாய் மூவாத—ஆனந்த
வெள்ளப் பெருக்கேகல் வித்தகா செந்திலுயர்
தெள்ளற் கரியவமு தே. (91)

அரியவமு தத்தைநெஞ் சன்பிலா ரெவ்வாறுந்
தெரியவரி தானசெந்திற் றேவைப்—பெரியவர்கள்
பேணத் தகுமேலாம் பேரொளியை நாளுநாங்
காண விருப்புறுதென் கண். (92)

கண்ணேகண் ணுண்மணியே காணுமதி நேயர்மனத்
தெண்ணேயெண் ணத்திலுறை யின்பமே—வெண்ணீறு
வேணியற்கு மெய்ப்பொருள்சொல் வித்தகனே யாள்செந்தில்
வாணிபதி போற்றவளர் வாய். (93)

வாய்க்கினிய தேனே வளர்கரும்பே வன்பிறவி
மாய்க்கின்ற மாமருந்தே வானமுதே—தாய்க்குமுயர்
நற்றாயே செந்திநகர் நாயகமே யென்றுதினஞ்
சொற்றார்க்குண் டாகுஞ் சுகம். (94)

சுகவழியை நாடிடமெய்த் தூய்சகச நிட்டை
புகவழிகாட் டிப்புரக்கும் போதா—மிகவெளியேற்
கெட்டுணையே யுன்கருணை யீவா யிதுததியே
குட்டுணிபின் னானசெந்திற் கோ. (95)

செந்திற்கோ மேதகமே செய்யமனத் தின்றறவோர்
சிந்திக்குஞ் செம்மணியே சிற்பரனே—வுந்தித்தே
ஊற்றுபொழி லார்செந்தி லுத்தமா வுன்வடிவு
தோற்றுவதென் றாகுமோ சொல். (96)

சொற்றாண்டு கோவிலாச் சோதியே நற்சுயம்பே
பற்றாறு மெய்மனத்தர் பாக்கியமே—மற்றேதும்
ஒப்பிலா வொன்றேமற் றோதற் கரியசெந்திற்
றிப்பியமே நற்கருணை செய். (97)

நற்றே சிகமணியே நாவலர்சொற் பாவமுதே
குற்றேவற் காளாக்குங் கோமளமே—வற்றாத
ஆழிக்க ரைச்செந்தி லத்தாவென் போர்க்குமுத்தி
யூழிக்குஞ் சொந்தமதுண் டு. (98)

உன்பேரிற் றோத்திரப்பா வுற்றிசைத்த மெய்த்தொண்டின்
அன்பே றருணைகிரி யார்சபத—முன்பேற
நற்கருணை செய்தசெந்தி னாயகமென் றிந்தவிதத்
திற்கவிகள் சொல்லநினைத் தேன். (99)

தேனே திரவியமே தீங்கரும்பே தீங்கரும்பிற்
றேனே வடித்தரசச் சற்கரையே—கோனேபொற்
செந்திற்கற் கண்டேநற் றெள்ளமுதே யென்றுதினஞ்
சிந்தித் திருக்கவெனைச் செய். (100)

செய்யமயில் வாழியுயர் செஞ்சேவ லும்வாழி
கையயிலார் செந்திற்கு கன்வாழி—வையமிசை
சொன்னாவி லிந்நூலைச் சொல்வார் சொலக்கேட்பார்
எந்நாளும் வாழிமெய்ம்மை யே. (101)

( திருச்செந்தில் வெண்பா வந்தாதி முற்றுப்பெற்றது. )

# கண்ணப்ப நாயனார் சரித்திரம் நொண்டிச்சிந்து.

## விநாயகர் காப்பு.

னின்னலஞ்சே ருடுப்பூரா யாளும் வேட
நாகனென்போன் றவவலியா லீன்ற செல்வ
வன்னமிகு திண்ணனர்வன வேட்டைக் கேகி
வலியகா ளத்திமலைப் பரமர்க் கண்டு
தின்னுமன வன்றொண்டா லாறு நாளிற்
றேய்ந்தமுத்தி வாய்ந்தகதை சுருக்கிச் சொல்ல
மன்னுகட விகடதட குடவ யிற்றெம்
வரதனிரு சாதசரண் மலர்காப் பாமே.

## நூல்.

### நொண்டிச்சிந்து.

*தானு தந் தனத்தானு—தானன தானத்தன தனத்தன தாத்ததனனே.*

சீரார்வனங்கண்மிகுந்தே-யெந்நாளுஞ் செழித்திடும்பொத்தப்பிநாட்டி லுயர்ந்த
பேரா ருடுப்பூ ரென்னு—நன்னகரைப் பேணி யரசுபுரி நாகனென்பவன்[னும்
வேடுவர்குலத் துதித்தோன்-அவன்மனை வித்தகக்கற்பி லுயர்ந்தத்தையென்
றீடு மிவர்க டமக்கே—புத்திரப்பேர் கெடுநாளி லாதிருந்த கொடுமைதன்னி
செங்கரத் தயிலேந்து—முருகனைச் சிந்தையின் மறந்திடாது சந்ததமுமே
பொங்கம தாய்ப்பணிந்து-மகிழ்வுடன் போற்றியென் றேதின மேத்திவந்தார்
அன்னவன் றன்னருளாற்-றத்தையென்பா ளற்புத மிகுந்தாற் கர்ப்பமதுற்றே
நன்னலத் தாண்சேயை-யீன்றுளா ணாகனு மகிழ்ந்தெடுத்தே யாகமணைத்தான்
மெத்தவுங் கனத்திடு சீர்-திண்ணனென விளங்குநா மமுமிட் டினாய்களித்தார்
இத்தகைய மைந்தர் பெற-இவ்வுலகி லெத்தவஞ்செய் தமெனச் சித்தமகிழ்ந்து
உலகினிற் பெருஞ்செல்வம்-பற்பல வுற்றிருந் தாலுமில்லைப் பெற்றிடுபயன்
அலகி லருமை வாய்ந்த-மக்கட்பே றும்புகழை யன்றியில்லை வேறுபுகழே
என்று மகிழ்ந்தன்பாய்-மைந்தனை யெத்த மிகவளர்த்தார் நேத்தியதாகச்
சென்றிடு வயதீரெட்டுள்-வில்வித்தை தேர்ந்த சமர்த்தனு ஓங்கச்செய்து
அப்பாற் கிழப்பருவமே-நாகனு மானதினு லேவெ[illegible] கானக வேட்டை
எப்போதுந் தன்மகற்கே-யன்புட னீய்ந்தே மகிழ்ந்திருந்தான் சாந்தமுடனே

பல்லவி.

வேட்டைக் கோலங்கொண்டார்—திண்ணனார் வன (வேட்)

அனுபல்லவி.

வாட்டுங் கருப்புவிற்கை பூட்டு மதனு கான (வேட்)

சரணம்.

மாட்டிய சோடுடன் அரிந்திகச் சையுங்கட்டிக்
கோட்டிய வில்லுங்கை கொண்டுதன் வெற்றிகாட்டி (வேட்)

ஈட்டி முசலமழு யெறிகதை குத்தம்நேமி
நீட்டிய வாழ்பல செறித்தம்புறுத் தூணிபூட்டி (வேட்)

காலினுங் கடுவிசைக் காலினர் திக்கடைக்
கோலினர் வேடர் குழாங்கள் பலவுஞ்சூழ (வேட்)

பல்லவி.

கான வேட்டஞ் செய்தாரே—திண்ணனார் (கான)

அனுபல்லவி.

வான மழாவுபொழிற் றேன்மழை தாவுமெழிற் (கான)

சரணம்.

ஏன மிரலை யெண்கு எத்துமை வாய்விலங்கு
மானவல் லியம்பொங்கு மதம்பொழி கசந்தங்கு (கான)

வாச்மல் லிகைபிச்சி வளருங்கோங் கிருவாச்சி
பேசுந்தேக் கொடுநொச்சி பெருமைபார்த் துளமெச்சிக் (கான)

கொல்லுங்கூ டம்புதொட்டுக் குறிபிழையாமை விட்டுச்
செல்லுமிரு கங்கள்ட்டு ஜெயபேரி கைமேலிட்டு. (கான)

நொண்டிச் சிந்து.

வேட்டைபல வாடுஞ்சமை யம்-அங்கொரு வேடன் வலைதப்பி யோடிடுபன்றி
நீட்டிய வேகமுட னே—செல்வதை நின்றங்கு ணர்ந்திது நன்றதென்று
வேகமுட னேதிண்ணனர்—அடிபற்றி வியர்துவிற் கையுடன் தாயர்துசென்று
பாகமுட னங்கு நின்ற-வேடர்களிற் பரிந்திரு பேர்காடன் நாணனென்போன்

பின்பன்றி யேநடந்தா—ரங்கொரு பேரா மரநிழலி னோரம்பன்றி
முன்பற்றுந் தகையா ர—நின்றதை முடுகியே வந்ததிண்ணனர் சுடுகியணைந்து
வீசியுடை வாளதினு—லிருதுண்டாய் வெட்டி முடித்ததனைக் கிட்டிநின்றார்
பேசரிய காடன் நாணனு—மதுகண்டு பேணி யவர்புகழை பூணிவியந்து

ஐயா பசியாலிளைத் தோம்-பன்றியை யறுத்து நெருப்பிலிட்டு வருத்துடனே
செய்யா மருமந்த யருந்திக்-களைப்பதை நீக்கிப்பசியதனைப் போக்குவமென்ன
ஒத்திடு திண்ணனு ரும்—உண்ணுநீ ருற்றவிட மெங்கே சொற்றிடுமென்ன
மெத்திடு தேக்கடர் சோலைக்—கப்புறம் மேவிடு மலையருகிற் றூவிச்செல்லும்
பொன்முகலி யென்ற நதியே-யவ்விடம் பூண நடப்பமென நாணன்சொல்ல
முன்னர் முடித்தபன்றியை—நீர்கொண்டு முந்துமென்றவருட னன்றுநடந்து
செல்லு மரைக்காதங்-கானத்திமலை தெரிந்தா னனைநோக்கிப் பிரியமுடன்
ஒல்லையிற் றிண்ணனு ரும்-அம்மலைக் குற்றிட லுசிதமெனச் சொற்றிடலுமே
சித்தப் படிசெல் வோம்—அவ்விடஞ் சேவை செயக்குடுமித் தேவருமுண்டு
ஒத்த மொழிபுகல வுந்-திண்ணருக் கோக்குமலை கிட்டக்கிட்டத் தியக்கலவே
கண்டா ரிதன்பெரு மை—இன்னமுங் காணுவோ மெனவிரைவு பூண்நடந்து
விண்டிடுபொன் முகலி நதி-நண்ணியே வேடக்கா டனைப்பன்றி யோடிருத்தி
நாணனுந் தானுமகிழ் வான்-மலைமிசை நாடியே விரைவினி லோடியேசெல்லத்
காணரிய சிவலிங் கம்-அங்கிருக்கக் கண்டானு னந்தமிகக் கொண்டானம்ம
தேவாதி தேவனருட்கண்-பார்வையிற் செய்யவாதத் திலிரும்பு துய்யபொன்
னும்போல்
பாவாதி பாவமொழிந் து-சிவன்மீது பற்றியவன் புருவமே முற்றிலுமானன்
நெடுநாட் பிரிந்திருந் த—தன்சேயை நேர்கண்ட தாயனைய வார்வம்பொங்கிக்
கடுகித்தன் னுள்ளக ளூறக்—கடவுளைக் கட்டித் தழுவிமுத்த மிட்டுமோந்து
அங்கரோ மாஞ்சித முற்றப்-பெருமூச் சார்ந்துகண் கண்ணீர் சோர்ந்துமயங்கி
துங்க வனன்மெழு கா-மனமுருகித் துய்யவிது பெறமுன்னஞ் செய்ததவமோ
சிங்கங் கரடிமத மாப்—புலிமிகச் சேருங்கா னகத்திடை நீருந்தனியாய்
யிங்கிருப் பதுபா வம்-ஐயோ என்செய்வ னென்செய்வன் புன்செயலேன்
என்றுகை கின்னமுவி டப்-பரவச மெய்திமயங்கியவ னொய்தினிற்றேர்ந்து
துன்றுபச் சிலைநீருந்-திருமுடியிற் சூட்டினரி யாவரெனக் கேட்டிடலுமே
ஐயனே முன்னொருகாலம்-வேட்டைதனக் காகவே நாகனுட னேகியபோது
பொய்யில்வே தியனொருவ-னிவ்வாறு பூசைக்கண் டேனென நாணன்சொல்ல
இதுவே யிறைவனுள்ளம்-மகிழ்வதற் கேற்றபணி யாகுமெனத் தோற்றிடலும்
அதுவே கடைப்பிடித்தன-ரீசர்க்குண வாகுமி றைச்சிதர வேகுவர்காணென்
நானேசெல் வேனென்று-பிரிவாற்று ணுடிநடப் பார்திரும்ப வோடிவருவார்
தேனேயென் செல்வமென்று-முத்தமிட்டுத் திரும்பி நடப்பார்மிக வருந்திடுவர்
கன்றுகாத் தபசுப்போல்-ஓடிவந்து கட்டிக்கொண்டு முத்தொட்டிக்கொள்வர்
நின்றுடன்கண்ணீர்சொரிவர் மனந்தேறி நீண்டகானகத்திடை தாண்டிநடந்து

பொன்முகலி யாறடைந்தனர்-காடன்வந்து போற்றி எனவணங்கிநின்று
என்னிது நேரமனவு-தாழ்த்தசெய லிதனையுரைத்திடென்றே நாணனும்
நக்குலக்கு வைத்தைமறந்து-காளத்தி யீசநாமு கண்டவுடன் போதமுணர்ந்து
பொங்குகருணைக்கடவுட்-கூன்றேடிப் போந்தனனெனவிது தேர்ந்துசொன்னான்
இன்னணு நக்கிருந்த பன்றியைத்-[illegible]யிலிட் டேவதக்கி வாயிலுமிட்டு
உன்னு வசைத்துமென்று-யினிய [illegible]றுதிகா ளத்திமலைக் கொற்றவற்கென
மற்றதைவீசியெறிந்த-செயலை மன்னியதெட்டவக்கிருக்குந் துன்னியதென்று
உற்றவிருவருமோர்ந்து-யிதனை ஒவ்வியிற்றீர்த் திடத்தரு வல்லுனர்கண்டும்
ஈன்றிடு தாய்தந் தை-யிருவரும் ளிக்கணம வழைத்துவரத் தக்கதுவென்றும்
ஊன்றியம னத்திற் கொண்டு—யங்கு ஓங்குகா னகமதை நீங்கியேசென்றார்
இன்னணுநாவவிறைச்சியை-வாயிட்டுத் தின்றருசிகண்டதிவென்றுவிடாதே
நன்னியகல்லையிற்கொண்டு-நா[illegible]ருக்கு நற்திருமஞ்சனமாட்டப்பற்றியவாயில்
நதிதனி னீர்கொண் டு—குடுமியில் நன்மலர் சொருகியே வன்மைவில்லம்புங்
கதியுடனேகைபிடித்து மற்றொரு கரத்தின்மா மிசமேற்றிச் சீர்த்ததையுடன்
விதிவச மெனச்சொல் லி-ஐயன் வேறு துணை யின்றியிருப் பாரெனவன்னி
அதிவிரை வாகடைந் து-காளத்தி யப்பன்முடி மீதிருந்த வொப்பின்மலரைப்
பூட்டிய காற்செருப்பாற்—[illegible]க்கிப் பொருந்து தன் வாய்நீர் திருந்துமஞ்சனம்
ஆட்டித்தன் குஞ்சிமல ரையன்றீரு லேயன்று முடிக்கணிந்து பையவணங்கி
தேக்கிலை மாமிசம தைப்—பத்தியுடன் திருமுன்ன ரேபடைத் தருகிநின்று
நாக்கிற்ருசிதேர்ந்துபடைத்தேன்-ஐயனேநல்லமுதெனவுண்பீர்வல்லவதேவா
என்றபே ரன்புமுதிர்ந்-நாட்டிறு ரெல்லன்றுடனிசையில்நல்லென்றுழ்ந்தான்
அன்றிரவிற்றூட்டமிருகங் கடவுருக்கணர்த் தம்வினைக்குமெனமனத்திலுன்னி
கைப்பிடித்தவில்லம்புடன்-மறந்தாங் கண்ணிமைபொருந்தாதிண்ணர்காத்து
செப்பிய வைகறைதனி-லிறைச்சி தேடிக்கா னகத்திடை யோடிச்சென்றார்
பன்னுறுங்கா ளத்திநாதரை-யருச்சனைசெய் பாச மிகுஞ்சிவ கோசரியாம்
நன்[illegible]ல வேதகுலத்தோன்-றுறவு நாளுந் தவமிகுந்த வாழ்வினிலுற்றோன்
மனத்தனி லன்புமிகுந்தே-காளத்தி வாதன் றனையேயுன்னிச் சாதமுடன்
இனந்தின நேமுகப்படி-யத்தினத்துந் தேவாருச் சனைசெய்ய மேவிடவுமே
வெந்திடு மிறைச்சிஎலும்புந்-திருமுன் மேவிடக்கண் டேமுனிவராவியயர்ந்து
சிந்தைதெளிந்தையமே[illegible]வென்-றிதனை திண்ணியவேடர்கள்பண்ணினர்போல்
என்றேயவ் வூன்கள்பலவு-மலகிட் டேகிடச்செய் தேசுத்தி யாகிடச்செய்து
நின்றேமஞ் சனமாட்டி-அருச்சனை நேமமுமி யற்றியே சாமவேதத்தால்
பாடித் துதியலசெய்து-மனமுருகிப் பற்றே பாவசத்தி லுற்றேகூத்தும்
ஆடிச்சிவ கோசரியர்-பதம்பணிந் தன்னியதபோவனத்தைநண்ணியிருந்தார்.

றான்வேட்டையாடச்சென்ற-திண்ணர் றுக்கியன்றிகலைகண்மிக்கவேயட்
மென்பதத் தால்வாட்டிக்-கோற்றேனை மிசவுங் கலந்தேதக் கிலையில்வைத்த
வாயின்மஞ் சனம்பூவுங்-குடுமியின் மருவிடக் கொணர்ந்துவந்து திருமுன்வைத்து
ஆயின்முன் போலுள தன்று-மிதுமிக வதிக மதுரமெனக் குசித்தெரிந்தேதன்
உண்ணுவீ ரென்கோவே-யெனவுரைத் துபசரித் தூட்டியன்பு காட்டிநின்று
திண்ணனார் செய்கையறிந்த-தாய்தந்தை சிந்தைகலங் கிக்காட னாணனுடன்
விரைவுடன் வந்துகண்டா-ரிவர்செயல் வேற்றுமை யாமென்றே சேர்த்திமிகு
உரைபல வாடியுமவர்-தம்வசத் தூற்றிடவி ணங்காமை பெற்றிடக்கண்டு
விதிவச மென்சொல்வோ-மிதுவுமுன் வேதனமைத்திட்டபடி ஓதுவதென்றும்
சதியுறு காலமென-கொந்துமகன் றன்னைவிட் டன்னைதந்தை தன்னகருற்று
இருவினைமலபரிபாகம்-ஒத்திருந்த வேதுவின் ஞற்பத்திசிவன்மீதினில்வைத்தே
கருவிருண் முழுதாங்காப்-பக்கனின்று காத்தே பணிசெய்தனர் கோத்தியதா
தவசிவ கோசரியருந்-தினந்தினஞ் சன்னதி யிறைச்சிசுத்தி பண்ணிவியந்து
பவகரு மங்கடொலைக்குஞ்-சிவாகமப் படியருச் சனைபல முடிவுசெய்தே
இனியிவ் விறைச்சிசிதக்-திருமுன்ன ரில்லாதிருக்கவருள்வல்லவாவென்றே
பணிவருங்கண்ணீர்மல்கி விண்ணப்பம் பண்ணியேவந்தான் றவப்புண்ணியனே
கானத்திக்கண்ணுதலோன் றொண்டர்மனக்கவலையொழிக்கஜக்தாந்திரைத்திரவின்
கீளு மன்பர்கனவில்-வேடுவன்செய் கேமமனைத் தும்பொல்லாப்பாதகமென்று
நிந்தனைபலசொல்லித்-தொண்டுசெய்து நீயேகவலைகொள்கின்றாயேபலம்பிச்
சிந்தைநொந்திடவேண்டா-மவன்செயல் செப்புதுங் கேட்டிடுவா யற்பனமாக
வேடுவனென்றெண்ணாதே-யவனுருவ மிஞ்சுசம் மீதுவைத்த வன்புருவமாம்
நீடுமவன் றன்னறி வே—னமையறியு கோறிவு மற்றவெதமக் குற்றசெயலே
எம்முடிமே னீசாத் து—நறுமலரை யேகிடச்செய் செருப்புக் காலையுணரில்
சம்முனங்க ளித்திடுபின் னை-முருகன் நற்பதத்தி னுமிகுந்த வற்புதமாமே
கோயிலா நாணுளு-மன்பாகாங் கொண்டிருந் திடுமுள்ளத் திண்டிராற்றிண்ணர்
வாயி லுமிழுநீ ரே—கங்கைமுதன் மாநதிநீர்த் தத்தின்மிக்கத் தானதிகமாம்
கொண்டுவச் தணியு மலர்-மாலயன் கோதிலருச் சனைசெயும் பூவினுமேலாம்
உண்டு சுவைபார்த் தே—யெமக்கீயு மூனதவிர்ப் பாகத்திலுந் தானதிகமாம்
ஆய்ந்துதிபலவு-மாரணங்க ளோங்குமுனி வோர்துதிப்பின் பாங்கினுமிக்காம்
கோதிலவன்செயலை-நீயுங்கண் கொண்டறிந் திடவுபாய முண்டுசொல்வேன்
காலைநங்கோவில்வந்து-நீயொருபா னன்னி யொழிந்திரப் புண்ணியர்செயல்
நீளுமனந் தேறக்காண் பா-யென்று நிறைந்த பரம்பொருளு மறைந்தனனுள்
உருக்கமிகுகோசரியர் சொற்பனம்விட் டெழுந்துடையவன் றனைநினைந்து
அருட்கட லானவன்செ யல்—மிகமிக வற்புதமீ துணராத தப்புடைநாயேன்
அறுசிதமென்றுரைத்தேன்-மாபாவி ஐயோநா யினேனெனது செய்வதென்று
மனமிக வச்சமடைந் தேவிடியப்பண்ணி வந்திடுமுன் பொன்முகலி முழ்கிவந்து.

அருகா காழ்ந்தவொருவன்-புண்ணியத்தா லாகியசு வர்க்கபத மேவியேநின்று
மருபடியர் சாகுபக்கி-யிக்குழலு மாந்தரென வேமனது சேர்தபுண்பட்டு
துன்பசா கரமுழ்கித்-திண்ணனார் துளங்கித்த னதுமனம் விளங்கிநின்று
இன்னுமிதற் கஞ்சவனே-கைகண்ட திருக்குதது மற்றொருகண் திருத்தியுடன்
தோண்டியவர் கண்ணிலப்பி-யிந்நோயுஞ் சுகமாக்கு வேனெனத் திடமாகக்
காண்டிடுகண் றோண்டி விட்டாற்-சுவாமிகண் காணவு பாயமிது பூணுமென
செருப்புறம் ஒருகாலை-யீசன் சென்னியிற்கண் ணருகூன்றியன்னுவிருப்பால்
இருப்பதுமற்றொருகண்ணை-முன்போ லெடுக்கக்கூரம்பைக்க ணடுக்கட்டார்
கருணைக்கட லாகியதிருக்காளத்தி கண்ணுதல்திண்ணர்செயல்கண்டிடவாற்று
தருமைத்திருவாய்மலர்ந்து-அன்புளகண் ணப்பாநிற்கவுமென் றருளிச்செய்து
கண்ணது தோண்டுகின்ற-கையைத்தன் கையாற் பிடித்துநின்று னையனுமே
விண்ணளி னிதனையுணர்ந்த-வரிபிரமர் வித்தகக் கடவுளருஞ் சித்தம்வியந்து
வேதகோஷ டங்களுடன்-கற்பகத்தின் மிக்கநறு மலர்களைப் பக்குவமாகச்
சீதமழை போற்பொழிந்து-வானந்தத் தேவதுந்துமி முழக்கியாவருங்கண்டார்
தீரமிகு ஞானவடிவன்-வேதகுலத் தேவசிவ கோசரியா ரியாவுமேகண்டு
வாரமும் வியப்புமிகுந்தே-தேவனடி வணங்கிவணங்கிமன மிணங்கிநின்றார்
நண்ணிய தவவடிவுடைத்-திண்ணனார் நற்பத்தி யுடன்ஞான வுற்பத்திகண்டு
புண்ணியகண் ணப்பனேயென்று-தேவன் புகன்றப டியெவரு நவின்றனரால்
அஞ்சாக் கினியினடுவிற்-புலன்வழிச்செல் லாதபடிமனதைப்போதவொடுக்கி
மிஞ்சு தவமிகச்செய்யு-மேலோர்க்கும் விளங்கரி தானபர னுளங்களிகொண்
டாறுனா னன்புமேலீட்டாற்-கண்ணையிடந் தப்பமனதிதுணிந்தவொப்பிலன்பர்
தேறுங்கரத்தைத்தமது-காத்தாற்சிக்கெனப்பிடித்த [illegible] செயல்மிக்கவியப்பாம்
உன்னருமை பத்திமுழுது-மோர்ந்தேவுனதிறைவான [illegible] காளமெச்சினேம்
என்னருமைக் கண்ணப்பனே-நீமக் கியைந்த வலதுபக்கத் தமர்ந்திருப்பாய்
என்றுதிரு வாக்களித்தனர்-காளத்தி யீசனடி சந்ததமும் வாசமதான
தற்றுபரமானந் தமுத்தி-எந்நாளுந் தோய்ந்திருந் தான்புகழைவாய்ந்திருந்தான்
ஆதலினு லிச்சரிதமன்புடன் யாவர்படித் தாலுமிக போகமுமுற்றுப்
போதமலி வுடன்ஞானச்-செல்வாய்ப் பூவிலுயர்ச் தேமுடிவிற்றேவிலுயர்ந்த
தேவாதிதேவன்பதித்தனை-நீங்காமற் சேர்ந்திருப்பரெனமறைசெப்பிடல்கண்டு
ஓவாமலைசைநகர்வாழ்-முருகர்பதமுச்சிதமாகத்துதிக்குபிச்சையாசொன்னான்
(தானா தந் தனத்தானா)

( கண்ணப்பநாயனார் நோண்டிச்சிந்து முற்றுப்பெற்றது. )